ஆதவன்

# ஆதவன்
ATHAVAN



வ.அ.இராசரெத்தினம்

ஒளி – 01 – செப்டம்பர் 12–25 2012 – தொ.பே.இல: 416 998 2284 – பக்கங்கள் – 40 கதிர்–17

# கிழக்கின் ஆட்சி யார் கையில்?

## முஸ்லிம் காங்கிரசின் ஆதரவை நாடும்

## அரசு – தமிழ் தேசிய கூட்டமைப்பு

நடந்து முடிந்த சப்பிரகமுவ வடமத்திய கிழக்கு மாகாணங்களுக்கான தேர்தலில் சப்ரகமுவ மற்றும் வடமத்திய மாகாணங்களில் அரசு அமோக வெற்றியீட்டி ஆட்சியமைக்க உள்ள நிலையில் கிழக்கு மாகாணத்தில் அரசு எதிர்பார்த்த வெற்றியை பெற முடியாத நிலையில் அறுதிப் பெரும்பான்மையின்றி ஆட்சியமைக்க முஸ்லிம் காங்கிரசின் தயவை நாடும் நிலை ஏற்பட்டுள்ளது.

சர்வதேச ரீதியில் முக்கியத்துவம் பெற்ற ஒன்றாக விளங்கிய கிழக்கு மாகாண சபைத் தேர்தலில் இலங்கை அரசு அறுதிப் பெரும்பான்மையை பெறாதது ஓர் அதிர்ச்சித் தோல்வியே. மட்டக்களப்பு, திருகோணமலை மாவட்டங்களில் தோல்வியடைந்த நிலையில் அம்பாறை மாவட்டமே அரசுக்கு கைகொடுத்துள்ளது. மூன்று மாவட்டங்களிலும் அரசு மொத்தமாக 12ஆசனங்களையும் மேலதிக போனஸ் ஆசனம் 2ஐயும் பெற்று மொத்தமாக 14ஆசனங்களைப் பெற்றுள்ளது. திருகோணமலையில் 1ஆசனத்தை வெற்றியீட்டிய தேசிய சுதந்திர முன்னணி அரசின் பங்காளிக் கட்சியாக இருப்பதால் மொத்தமாக 15ஆசனங்களைப் பெற்றுள்ள நிலையில் மட்டக்களப்பில் 6ஆசனங்களையும் திருகோணமலையில் 3ஆசனங்களையும் பெற்று வெற்றியீட்டியுள்ள தமிழ்த் தேசிய கூட்டமைப்பு அம்பாறையில் 2ஆசனங்களைப் பெற்று மொத்தமாக 11ஆசனங்களைப் பெற்றுள்ளது. மட்டக்களப்பில் 1ஆசனத்தையும் திருகோணமலையில் 2ஆசனங்களையும் பெற்ற முஸ்லிம் காங்கிரஸ் அம்பாறையில் 4ஆசனங்களைப் பெற்று மொத்தமாக 7ஆசனங்களைப் பெற்றுள்ளது. மட்டக்களப்பில் படுதோல்வி அடைந்த ஐக்கிய தேசியக்கட்சி அம்பாறையில் 3ஆசனங்களையும் திருகோணமலையில் 1ஆசனத்தையும் பெற்று மொத்தமாக 4ஆசனத்தைப் பெற்றுள்ளது. ஐக்கிய தேசியக்கட்சி தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆட்சியமைக்க நிபந்தனையற்ற ஆதரவு வழங்க தயாரான நிலையில் அரசின் மொத்த ஆசனம் 15ஆகவும் தமிழ் தேசிய கூட்டமைப்பும் ஐக்கிய தேசியக் கட்சியும் இணைந்து 15ஆசனமாகவும் உள்ள நிலையில் முஸ்லிம் காங்கிரசின் ஆதரவு யாருக்கு கிடைக்கின்றதோ அந்தக் கட்சியே ஆட்சியமைக்கும் என்ற நிலை தோன்றியுள்ளது. மத்தியில் அரசின் பங்காளிக் கட்சியாக இருக்கும் முஸ்லிம் காங்கிரஸ் நடைபெற்ற கிழக்கு மாகாணசபைத் தேர்தலில் தனித்து போட்டியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இன்றிரவு நடைபெறவுள்ள முஸ்லிம் காங்கிரசின் உயர்மட்ட குழுவின் கூட்டத்தில் அது யாருக்கு ஆதரவளிக்கும் என்பது முடிவாகும். சர்வதேசம் தேர்தல் முடிவுகளில் அக்கறை கொண்டிருப்பதால் குறிப்பாக அயல்நாடான இந்தியா மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளதால் மு.கா வின் ஆதரவு த.தே. கூட்டமைப்புக்கு கிடைக்க வாய்ப்புண்டு

### ஆகஸ்ட் 29 தொடக்கம் செப்டம்பர் 09 ஆம் திகதி வரை லண்டனில் இடம்பெற்ற பரா ஒலிம்பிக் (வலது குறைந்தோருக்கான) போட்டி முடிவுகள்

| நாடுகள் | தங்கம் | வெள்ளி | வெங்கலம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| சைனா | 95 | 71 | 65 | 231 |
| ரஷ்யா | 36 | 38 | 28 | 102 |
| பிரித்தானியா | 34 | 43 | 43 | 120 |
| அமெரிக்கா | 31 | 29 | 38 | 98 |
| ஜேர்மனி | 18 | 26 | 22 | 66 |
| கனடா | 7 | 15 | 9 | 31 |

### மூன்று மாகாணசபைத் தேர்தல் விபரங்கள் ஒரே பார்வையில்




### கிழக்கு மாகாண ஆட்சியைக் கைப்பற்ற இறுதி அஸ்திரங்களை பாவிக்கும் அரசு.
### முதலமைச்சர், மத்திய அமைச்சுக்கள் மு.கா.வை தேடி வருகிறது அதிஷ்டம்!

ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரசுடன் இணைந்து கிழக்கு மாகாண ஆட்சியை நிறுவுவதற்கு தீர்மானித்துள்ள அரசு, இதற்காக முஸ்லிம் காங்கிரசுக்கு முதலமைச்சர் பதவியை விட்டுக் கொடுப்பது பற்றித் தீவிரமாக ஆராய்ந்து வருவதாக தெரிவிக்கப்படுகின்றது. அதேபோல், எதிர்வரும் அமைச்சரவை மாற்றத்தின்போது முக்கியமான பொறுப்புகளை முஸ்லிம் காங்கிரஸிடம் வழங்குவதற்கும் அரசு முடிவெடுத்துள்ளதாக தெரிகிறது.

கிழக்கு மாகாணசபையின் விட்டுக் கொடுப்புடன் கூட்டாட்சியாக மு.கா.வுடன் இணைந்து செயற்படத் தயார் என்று தமிழ் தேசிய கூட்டமைப்பு அறிவித்திருந்த ஒரு சூழலில் அரசின் இந்த யோசனை வெளியாகியுள்ளது. அரசின் இந்தத் தீர்மானம் நேற்றிரவு ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரசுக்கு தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. அதேவேளை, கிழக்கு ஆட்சியை எவ்வாறு அமைப்பது, மாகாண அமைச்சுக்களில் எவரை நியமிப்பது உட்பட பல விடயங்களை மு.காவுடன் பேச உயர்மட்ட அமைச்சர் குழுவொன்று தயாராகி உள்ளதாக தெரிவிக்கப்படுகிறது.

இது விடயத்தில் மு.க.தலைமைத்துவம் கட்சி உறுப்பினர்களுடன் பேச்சு நடத்தி முடிவுகளை எடுக்கும்வரை காத்திருப்பதாகவும் அந்த அமைச்சர் மேலும் குறிப்பிட்டார்.



# என்னை வீழ்த்த நினைத்த கூட்டமைப்புக்கு தக்க பாடம் புகட்டியுள்ளனர் மட்டு - மக்கள் - பிள்ளையான்

என்னை வீழ்த்த நினைத்த தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு மட்டக் களப்பு மாவட்ட மக்கள் தகுந்த பாடம் புகட்டியுள்ளனர் என முன்னாள் முதலமைச்சரும் தமிழ் மக்கள் விடுதலைப் புலிகள் கட்சியின் தலைவருமான கிழக்கு மாகாண சபையின் முதன்மை வேட்பாளராக போட்டியிட்டு வெற்றி பெற்றவருமான சிவனேசதுரை சந்திரகாந்தன் தெரிவித்தார்.

கிழக்கு மாகாணசபைத் தேர்தல் முடிவுகள் வெளியானதைத் தொடர்ந்து அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் மேற்கண்டவாறு தெரிவித் துள்ளார். அவர் தனது அறிக்கையில் மேலும் தெரிவித்துள்ளவை வருமாறு. நடைபெற்று முடிந்த கிழக்கு மாகாண சபைத் தேர்தலிலே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு என்னை எந்த விதத்திலாவது தோற்கடிக்க வேண்டும் என கங்கணம் கட்டிக் கொண்டு பல முயற்சிகளில் ஈடுபட்டது. அப்படியிருந்தும் ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பின் சார்பில் போட்டி யிட்ட வேட்பாளர்களில் அதிகளவான வாக்குகளைப் பெற்று நான் வெற்றி பெற்றுள்ளேன். என்னை வெற்றி பெறச் செய்த மட்டக்களப்பு மாவட்ட மக்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியினைத் தெரிவிக்கின்றேன்.

அத்தோடு கிழக்கு மாகாண த்திலே ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பின் சின்னத்தில் போட்டியிட்ட வேட்பாளர்களுக்கு ஆதரவு நல்கிய அனைவருக்கும், கிழக்கு மாகாணத்திலே வெற்றிலைச் சின்னத்தில் வாக்களித்த அனைவருக்கும், தமிழ் மக்கள் விடுதலைப் புலிகளின் கட்சியின் சார்பில் எனது நன்றியினைத் தெரிவிக்கின்றேன

# பிள்ளையானால் எப்படி 20,000 க்கும் மேற்பட்ட விருப்பு வாக்குகளைப் பெற முடிந்தது? - அரியநேந்திரன் எம்.பி



தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கிழக்கு மாகாணசபைத் தேர்தலில் ஆட்சியமை ப்பதைத் தடுப்ப தற்காக பல்வேறு சூட்சிகள் மேற்கொள்ள ப்பட்டு தமது ஆசனங்களின் எண்ணிக்கை குறைக்கப் பட்டுள்ளன என கூட்டமைப்பின் மட்டக்களப்பு மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் பா.அரியநேந்திரன் குறிப்பிட்டார். இது தொடர்பில் தாம் மக்கள் முன்னால் வெகு விரைவில் உண்மையை அம்பலப் படுத்தப் போவதாகவும் தெரிவித்தார். அவர் மேலும் கருத்துத் தெரிவிக்கையில்,

மட்டக்களப்பு மாவட்டத்தில் பாரிய வாக்கு எண்ணும் மோசடி நடந்துள்ளது என தெரிவிக்கப்படுகிறது. முதற்கட்ட வாக்கு கணக்கெடுப்பில் 120,000க்கும் மேற்பட்ட வாக்குகள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்குக் கிடைத்திருந்தன. அதனைத் திரும்பவும் கணக்கிட வேண்டும் என வாக்கு எண்ணும் நிலையங்களில் வாக்கு எண்ணிக்கையில் குளறுபடிகளைச் செய்த தேர்தல் அதிகாரியும் அரச தரப்பும் பின்னர் 104,682வாக்குகள் தமிழரசுக்குக் கிடைத்ததாக அறிவித்தனர். தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கு 7ஆசனங்கள் கிடைக்க இருந்த நிலையில் இந்த மோசடியின் மூலம் ஒரு உறுப்பினர் குறைக் கப்பட்டது. ஆளும் கட்சிக்கு ஒரு ஆசனம் கூட்டப்பட்டது. தமிழ்த் தேசியக் கூட்டமை ப்பிலிருந்து அபகரிக்கப்பட்ட அந்த வாக்கு மூலம் கிடைத்த உறுப்பினர் பதவி தமிழர் ஒருவருக்கு வழங்கப்பட வேண்டும் என அரச மேலிடம் உத்தரவிட்டதைத் தொடர்ந்து ஆளுந் தரப்பில் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணிகளின் விருப்பு வாக்குகளின் அடிப்படையில் 6ஆவது இடத்தில் இருந்த பிள்ளையான் திடீரென முதலாம் இடத்திற்கு கொண்டு வரப்பட்டார் என தெரிவிக்கப்படுகிறது. பிள்ளையானால் எப்படி 20,000க்கும் மேற்பட்ட விருப்பு வாக்குகளைப் பெற முடிந்தது?. 6ஆம் இடத்திலிருந்த பிள்ளையான் எப்படி முதலாம் இடத்திற்கு வந்தார் என்ற சந்தேகம் பெரும்பாலான முஸ்லிம் களுக்கும் காணப்படுகின்றது. பிள்ளையான் விருப்பு வாக்கில் தோற்றுப் போனதைக் கண்டவுடன் வாக்கு எண்ணும் நிலையத் திலிருந்து தேர்தல் தினமான சனிக்கிழமை இரவே வெளியேறியிருந்தனர். பின்னர் முதலாமிடத்திற்கு வெல்ல வைக்கப்பட்ட பின்னர் கொழும்பிலிருந்து அரச உயர் மட்டம் தொலைபேசியில் கூறியதன் பின்னரே அவர் வாக்கு எண்ணும் நிலைய த்திற்கு வந்தார் என எமக்குத் தகவல் கிடைத்துள்ளது. தேர்தல் முடிவுகள் உத்தியோகபூர்வமாக அறிவிக்கப்பட்டதன் பின்னரே தேர்தல் கடமைகளில் ஈடுபட்ட தமிழ், முஸ்லிம் உத்தியோகத்தர்கள் ஊடாக இதனை நாம் அறிந்து கொண் டோம். முன்னர் நமக்கு தெரிவித்திருந்தால் தேர்தல் ஆணையாளருடன் தொடர்பு கொண்டு உடனே நாம் பெறுபேறுகளை நிறுத்தி வைத்திருப்போம். மட்டடக் களப்பில் தமிழ்த் தேசியக் கூட்டமைப் பிற்கு 7ஆசனங்களைப் பெறக்கூடிய வாய்ப்பு இருந்தது. இதன் மூலம் போனஸ் ஆசனமும் எமக்குக் கிடைத்திருக்கும். இறுதி நேரத்தில் இவை தடுக்கப்பட்டன என்றார்.

# கிழக்கில் ஐ.ம.சு.கூ ஆட்சி மு.கா. ஆதரவு அரசுக்கே!

## திடமாகக் கூறினார் மஹிந்த



வடமத்திய, சப்பிரகமுவ மற்றும் கிழக்கு மாகாண சபைகளில் ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பு விரைவில் ஆட்சி யமைக்கும் என்று ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ நேற்றுத் திட்டவட்டமாகத் தெரிவித்திருக்கிறார்.

கிழக்கில் ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பு ஆட்சியை அமைக்க ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் ஆதரவை வழங்கும் என்றும் ஜனாதிபதி திடமான நம்பிக்கை வெளியிட்டார்.

ஜனாதிபதி செயலகத்தில் நேற்றுக் காலை நடைபெற்ற அரச நாடாளுமன்றக் குழுக் கூட்டத்தில் உரையாற்றும் போதே மேற்கண்டவாறு குறிப்பிட்ட ஜனாதிபதி, தமது அரசின் மீதான மக்களின் நம்பிக்கை தொடர்ந்தும் இருப்பதையே இந்தத் தேர்தல் முடிவுகள் காட்டுவதாகவும் தெரிவித்துள்ளார். இதே நாடாளுமன்றக் குழுக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த அமைச்சர் ரவூப் ஹக்கீமும் இங்கு கருத்து வெளியிட்டுள்ளார்.

தேர்தல் அறிவிக்கப்படுவதற்கும் முன்பும் பின்பும் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரசை மட்டம் தட்டி சில சக்திகள் செயற்பட்டதாக இங்கு விசனம் வெளியிட்ட அமைச்சர் ரவூப் ஹக்கீம், மு.கா. இனவாத த்ததை தூண்டுவதாகவும் மதவாதத்தை தூண்டுவதாகவும் மேற்கொள்ளப்பட்ட விஷமப் பிரசாரங்களுக்கு தேர்தலில் மக்கள் முற்றுப்புள்ளி வைத்து விட்டார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார். கிழக்கு மாகாண சபையில் ஆட்சி அமைக்க யாருக்கு அதரவு வழங்குவது என்பது குறித்து கட்சியில் அனைத்து மட்டத்துடனும் பேச்சு நடத்தி பின்னர் இறுதி முடிவை தெரிவிக்க இருப்பதாகவும் ரவூப் ஹக்கீம் இங்கு தெரிவித்துள்ளார். இதேவேளை, கொழும்பில் தற்போது நடைபெற்று வரும் பொதுநலவாய நாடுகளின் பாராளுமன்ற அமைப்பின் உச்சிமாநாட்டில் அமர்வுகளில் ஆளும் கட்சி நாடாளுமன்ற உறுப்பினர்கள் அனைவரும் கலந்து கொள்ள வேண்டும் என ஜனாதிபதி இந்தக் கூட்டத்தின் போது கேட்டுக் கொண்டுள்ளார்.

# ஆட்சியில் அமர்வது யார்? மு.கா.வின் முடிவு இன்று! வெற்றி வேட்பாளர்களுடன் ஹக்கீம் ஆராய்வு

கிழக்கில் ஆட்சியமைக்கும் சக்தியாக முஸ்லிம் காங்கிரஸ் உருவெடுத்து ள்ளதால், அக்கட்சியின் ஆதரவைப் பெற்றுக் கொள்வதற்கு அரசும் தமிழ் தேசியக் கூட்டமைப்பும் கடும் பிரயத்தன ங்களை மேற்கொண்டு வரும் நிலையில், தமது தரப்பு ஆதரவு எவருக்கு என்பது தொடர்பில் மு.கா. இன்று ஆராயவுள்ளது. இதற்காக கட்சியின் அதியுயர் பீடம் இன்று மாலை கட்சித் தலைமையகமான தாருஸ் ஸலாமில் அவசரமாகக் கூடவுள்ளது. அத்துடன், அதியுயர் பீடக் கூட்டததில் கலந்து கொள்ளுமாறு கிழக்குத் தேர்தலில் வெற்றி பெற்ற தமது வேட்பாளர்களுக்கு மு.கா. அறிவித்து ள்ளது.

கிழக்கில் ஆட்சியொன்றை ஏற்படு த்துவதற்குத் தாம் எந்தத் தரப்புக்கு ஆதரவை வழங்க வேண்டும், அவ்வாறு ஆதரவை வழங்கும் பட்சத்தில் முன் வைக்க வேண்டிய நிபந்தனைகள் ஆகியன உட்பட தேர்தல் விவகாரம் தொடர்பில் மேலும் பல விடயங்கள் குறித்து இக்கூட்டத்தில் விரிவாக கலந்துரை யாடப்படும் என தெரியவருகின்றது.

குறிப்பாக, கிழக்கு மாகாணசபைத் தேர்தலில் இந்த தடைவை வெற்றி பெற்றுள்ள வேட்பாளர்கள் எந்த தரப்புக்கு ஆதரவை வழங்க வேண்டும் என நினைக்கிறார்களோ அவர்கள் தொடர்பில் ஆராயப்படவுள்ளது. இதே வேளை முஸ்லிம் காங்கிரஸின் தலைவரும் அமைச்சருமான ரவூப் ஹக்கீம் நேற்றுக் காலை ஜனாதிபதி மஹிந்தராஜபக்ஷவை அலரிமாளிகையில் சந்தித்து பேசியுள்ளார். இந்தச் சந்திப்பின் போது கிழக்கு மாகாண சபையில் ஆட்சி அமைக்க ஒத்துழைப்பு வழங்குமாறு அமைச்சர் ஹக்கீமிடம் ஜனாதிபதி கோரியுள்ளதாக தெரிவிக் கப்படுகின்றது. தேர்தல் முடிவுகள் வெளியானதை அடுத்து நேற்று முன்தினம் ஞாயிற்றுக்கிழமை இரவு முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் ஹக்கீம் அம்பாறை. மட்டக்களப்பு, திருகோணமலை ஆகிய மாவட்டங்களுக்கு விஜயம் செய்து கட்சியின் முக்கியஸ்தர்களையும் மக்களையும் சந்திப்பதற்கு ஏற்பாடாகி யிருந்தது. ஆனாலும் கொழும்பில் முக்கிய சந்திப்புக்களில் கலந்து கொள்ள வேண்டி ஏற்பட்டதனால் இந்தப் பயணத்தை அவர் பிற்போட்டுள்ளதாக கட்சி விடுத்துள்ள செய்திக் குறிப்பில் தெறிவிக்கப்பட்டுள்ளது.

கிழக்க மாகாணசபைத் தேர்தலில் தமிழ்த் தேசிய ஊட்டமைப்பு 11 ஆசனங்களையும் ஐக்கிய தேசியக் கட்சி 4 ஆசனங் களையும், பெற்றுள்ளன. இந்த நிலையில் தமிழ் கூட்டமைப்பும் ஐக்கிய தேசியக் கட்சியும் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸும் இணைந்து ஆட்சி அமைக்கும் உரிமையை வழங்க வேண்டும் மென்று தமிழ் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா. சம்பந்தன் கோரிக்கை விடுத்துள்ளார். கிழக்கில் ஆட்சியை அமைப்பதற்கு முஸ்லிம் காங்கிரஸ் ஆதரவு வழங்க வேண்டும் மென்று ரவூப் ஹக்கீமிடம் ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷவும் தமிழ் டேசியக் கூட்டமை ப்பின் தலைவர் இரா. சம்பந்தனும் கோரியுள்ள நிலையிலேயே இன்று முஸ்லிம் காங்கிரஸின் அதி உயர் பீடம் கூடுகின்றது.



# ஆதவன்

ATHAVAN
70-365 Murray Ross Pkwy,
North York, (Ont) M3J 3T7
Toronto, Canada

Office: 416 998 2284
: 647 340 0329
email : athavannews@gmail.com
Web : athavannews.com

2012 செப்டம்பர் 12-25


பேசாத வார்த்தைக்கு நீ எஜமான்
பேசின வார்த்தை உனக்கு எஜமான்

## தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்ட தமிழ் மக்கள்

மீண்டும் மீண்டும் முருங்கை மரம் ஏறும் வேதாளத்தைப் போன்று தமிழ் மக்கள் அனைவரும் மீண்டும் ஒருமுறை தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டுள்ளனர். 2009இல் நடைபெற்ற அரசின் முள்ளிவாய்க்கால் தமிழ் மக்கள் மீதான கோரத் தாக்குதலுக்குப் பின்னர் நடைபெற்ற முதலாவது கிழக்கு மாகாணசபைத் தேர்தலை சர்வதேசமே மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நிலையில் தமிழ்த் தேசியம் தனது உரிமைகளை நிலைநாட்ட பயன்படுத்தும் வாக்குச்சீட்டுக்களை உரிய முறையில் பயன்படுத்தாது தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டுள்ளது.

மட்டக்களப்பில் 06 ஆசனங்களையும் திருகோணமலையில் 03 ஆசனங்களையும் அம்பாறையில் 02 ஆசனங்களுமாக மொத்தமாக 11 ஆசனங்களைப் பெற்றுள்ள தமிழ்த் தேசிய கூட்டமைப்பு மொத்தமாக பெற்ற வாக்குகள் 193,827. அதேவேளை மட்டக்களப்பில் 03 ஆசனங்களையும் திருகோணமலையில் 03 ஆசனங்களையும் அம்பாறையில் 05 ஆசனங்களுமாக ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி 12 ஆசனங்களையும் பெற்றுள்ள நிலையில் அது பெற்ற மொத்த வாக்குகள் 200.044.

ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணிக்கும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பிற்கும் இடையேயுள்ள வாக்கு வித்தியாசம் மொத்தம் 6217 வாக்குகள். இதன் காரணமாக அரசு மேலதிகமான 02 போனஸ் ஆசனங்களை தனதாக்கிக் கொண்டுள்ளது. ஆனால் 03 மாவட்டங்களிலும் சேர்த்து வாக்களிக்காத மொத்த தமிழ் வாக்காளர்களின் எண்ணிக்கை ஒரு இலட்சத்திற்கும் மேலுள்ள நிலையில் எமது வாக்களிப்பு வீதம் அதிகரிக்கப்பட்டிருக்குமாயின் 02 போனஸ் ஆசனங்கள் உட்பட திருகோணமலையில் மொத்தமாக 05 ஆசனங்களையும் மட்டக்களப்பில் மேலதிகமாக 02 ஆசனங்களையும் அம்பாறையில் 03ஆசனங்களையும் பெற்று மொத்தமாக 18 ஆசனங்களைப் பெற்று கிழக்கில் அறுதிப் பெரும்பான்மையாக ஆட்சியமைத்திருக்க முடியும். ஆனால் இன்றுள்ள நிலையில் கிழக்கு மாகாணத்தில் மூன்றாவது பெரும்பான்மையினைப் பெற்றிருக்கும் முஸ்லிம் காங்கிரசின் ஆதரவை வேண்டி நிற்கும் நிலையே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கு ஏற்பட்டுள்ளது.

முஸ்லிம் முதலமைச்சர் என்ற கனவில் இருக்கும் முஸ்லிம் காங்கிரசின் சகல நிபந்தனைகளுக்குட்பட்டு ஆட்சியமைக்க வேண்டிய நிலை தமிழ் தேசிய கூட்டமைப்பிற்கு ஏற்பட்டுள்ளது. ஆனால் அதேவேளை மத்தியில் ஆட்சியின் பங்காளியாக இருக்கும் முஸ்லிம் காங்கிரசின் ஆதரவு கிழக்கு ஆட்சியில் அரசுக்கா - இல்லை தமிழ்த்தேசிய கூட்டமைப்பிற்கா என்பது கேள்விக்குறியே?

கிழக்கைப் பொறுத்தவரை முஸ்லிம் மக்களில் பெரும்பான்மையோர் தமிழ் மக்களுடன் இணைந்து வாழவே விரும்புகின்றனர். தமிழ் பேசும் மக்களின் விடுதலை என்பதும் அவர்களது சுயாட்சி என்பதும் முஸ்லிம் மக்களையும் இணைத்ததாகவே உள்ளது. இதனை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு நன்கு உணர்ந்துள்ளது. முதலமைச்சர் பதவியைத் தருகின்றோம் ஆட்சியமைக்க கரம் சேருங்கள் என்ற சம்பந்தனின் அழைப்பு இங்கு விதந்துரைக்கப்பட வேண்டியது. ஆனால் முஸ்லிம் மக்களின் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ற முஸ்லிம் காங்கிரஸ், முஸ்லிம் மக்களின் மன உணர்வுகளுக்கு எந்தளவு தூரம் முக்கியத்துவம் கொடுத்து முடிவுகளை எடுக்கும் என்பதும் அது அற்ப சொற்ப சலுகைகளுக்கு விலை போகுமா என்பதும் அதன் முடிவுகளிலுலேயே தங்கியுள்ளது

ஆசிரியர்.


*Editor /ஆசிரியர்*
**Hajanthini Michael Collin**
**ஹஜேந்தினி மைக்கல் கொலின்**

*Chief Editor& Publisher/பிரதமஆசிரியர் வெளியீட்டாளர்*
**Babu Vasanthakumar**
**பாபு வசந்தகுமார்**

*Manager / முகாமையாளர்*
**S.Chandrakumar**
**ச.சந்திரகுமார்**

*Layout by:*
**Michael**

ATHAVAN MEDIA
Publishing Community Newspaper. Athavan is registered :
Business Identification Number ( B I N ) # 220365969
Certificate of Registration of Copyright # 1094639
National Ethnic Press and Media Council of Canada # 0000506


# தேர்தல் முடிவுகள்

# கிழக்கு மாகாணம்

## அம்பாறை மாவட்டம்

| கட்சிகள் | பெற்ற வாக்குகள் | வீதம் | ஆசனம் |
|---|---|---|---|
| ஐ.ம.சு.மு. | 92,530 | 33.66 | 5 |
| ஸ்ரீல. மு. கா. | 83,658 | 30.43 | 4 |
| ஐ.தே. க. | 48,028 | 17.47 | 3 |
| இ.த.அ.க. | 44,749 | 16.28 | 2 |
| ம.வி. மு. | 2,305 | 0.84 | |
| சோஷலிச முன்னணி | 1,489 | 0.54 | |
| ஈ.ஐ.மு. | 531 | 0.19 | |
| சுயேச்சைக்குழு 10 | 399 | 0.15 | |
| சுயேச்சைக்குழு 5 | 382 | 0.14 | |
| இ.தொ.கட்சி | 111 | 0.04 | |
| ஐ.சோ.க. | 103 | 0.04 | |
| அ.இ.த.ஐ.மு. | 76 | 0.03 | |
| **செல்லுபடியான வாக்குகள்** | **274,935** | | **94.26%** |
| **நிராகரிக்கப்பட்ட வாக்குகள்** | **16,744** | | **5.74%** |
| **அளிக்கப்பட்ட மொத்த வாக்குகள்** | **291,679** | | **66.10%** |
| **பதிவு செய்யப்பட்ட வாக்காளர்கள்** | **441,287** | | |

## மட்டக்களப்பு மாவட்டம்

| கட்சிகள் | பெற்ற வாக்குகள் | வீதம் | ஆசனம் |
|---|---|---|---|
| இ.த.அ.க. | 104,682 | 50.83 | 6 |
| ஐ.ம.சு.மு. | 64,190 | 31.17 | 4 |
| ஸ்ரீல. மு. கா. | 23,083 | 11.21 | 1 |
| சுயேச்சைக்குழு 8 | 5,712 | 2.77 | |
| ஐ.தே. க. | 2,434 | 1.18 | |
| சுயேச்சைக்குழு 21 | 1,905 | 0.93 | |
| ஈ.ஐ.மு. | 1,777 | 0.86 | |
| சுயேச்சைக்குழு 11 | 863 | 0.42 | |
| சோஷலிச முன்னணி | 379 | 0.18 | |
| எ.தே.மு. | 163 | 0.08 | |
| சுயேச்சைக்குழு 19 | 146 | 0.07 | |
| ம.வி.மு. | 72 | 0.03 | |
| **செல்லுபடியான வாக்குகள்** | **205,936** | | **92.28%** |
| **நிராகரிக்கப்பட்ட வாக்குகள்** | **17,223** | | **7.72%** |
| **அளிக்கப்பட்ட மொத்த வாக்குகள்** | **223,159** | | **64.29%** |
| **பதிவு செய்யப்பட்ட வாக்காளர்கள்** | **347,099** | | |

## திருகோணமலை மாவட்டம்

| கட்சிகள் | பெற்ற வாக்குகள் | வீதம் | ஆசனம் |
|---|---|---|---|
| இ.த.அ.க. | 44,396 | 29.08 | 3 |
| ஐ.ம.சு.மு. | 43,324 | 28.38 | 3 |
| ஸ்ரீல. மு. கா. | 26,176 | 17.15 | 2 |
| ஐ.தே. க. | 24,439 | 16.01 | 1 |
| தே.சு.மு. | 9,522 | 6.24 | 1 |
| சுயேச்சைக்குழு 10 | 1,642 | 1.08 | |
| ம.வி. மு. | 777 | 0.51 | |
| சோஷலிச முன்னணி | 612 | 0.4 | |
| ஈ.ஐ.மு. | 385 | 0.25 | |
| அ.இ.த.ஐ.மு. | 384 | 0.25 | |
| ஐ.சோ.க. | 149 | 0.1 | |
| சுயேச்சைக்குழு 8 | 121 | 0.08 | |
| இ.தொ.க. | 107 | 0.07 | |
| **செல்லுபடியான வாக்குகள்** | **152,663** | | **93.09%** |
| **நிராகரிக்கப்பட்ட வாக்குகள்** | **11,342** | | **6.91%** |
| **அளிக்கப்பட்ட மொத்த வாக்குகள்** | **163,987** | | **66.83%** |
| **பதிவு செய்யப்பட்ட வாக்காளர்கள்** | **245,363** | | |

# ஒரு பிரகாசிக்கும் பாத்திரம்
## A Shining Bowl



பேரழிவுகளையும் ஏமாற்றங்களையும் தவிர்க்க முடியாத ஓர் உலகில், சிறந்ததொரு செயல் என்னவெனில், அமைதியையும் தெளிவையும் கொண்ட உள்ளே உள்ள உலகத்தை நோக்கி வழிகாட்டும் "உள்ளத்தின் அந்த எளிமையான அழைப்பிற்குச்" செவி சாய்ப்பதே என மஹராஜி கூறுகின்றார்.

மஹராஜி அவர்கள் சிறு வயதினராக இருந்த காலத்தில் இருந்தே அவ்வழைப்புக்குச் செவிசாய்க்கும்படி மக்களை ஊக்குவித்து வருகின்றார்.

உங்கள் வாழ்வில் நடைபெறும் விடயங்கள் எல்லாவற்றையும் கொண்டு உங்கள் வாழ்வை நீங்கள் மதிப்பிட வேண்டாம். "உள்ளே உள்ள உலகைப் பாருங்கள். ஏனெனில் அங்கே மிகவும் அழகானதும் எளிமையானதுமானதொன்று பரிணமித்துக் கொண்டிருக்கிறது."

மஹராஜி தனது 13 ஆவது வயதில் தனது பிறந்த நாடான இந்தியாவை விட்டு தனது செய்தியைப் பற்றி மேலும் அறிய விரும்பிய மேலை நாடுகளில் உள்ள மக்களின் அழைப்பை ஏற்று அங்கு சென்றார். அன்று தொடக்கம் அவர் உலகெங்குமுள்ள 9.5 மில்லியனுக்கும் மேற்பட்ட மக்களுக்கு உரையாற்றியுள்ளார்.

அண்மையில் மஹராஜி அவர்கள், சிறீலங்காவில் இருந்து தனது வீட்டையும் சொத்துக்களையும் கடற் கோளுக்குப் (Tsunami) பலிகொடுத்த ஒருவர் தனக்கொரு பாத்திரத்தை பரிசாக அனுப்பியிருந்ததாகக் குறிப்பிட்டார். "கடற்கோள் தாக்குவதற்கு சில நாட்களுக்கு முன்னர். அவர் பல காலமாக அவரின் குடும்பச் சொத்தாக இருந்த அந்தப் பாத்திரத்தை துப்புரவு செய்ய தீர்மானித்தார். ஆகவே அவர் அதை மினுக்கி மிக அழகானதாக மாற்றினர்.

"அதற்குப் பின் கடற்கோள் வந்து எல்லாவற்றையும் கடலுக்கு அடித்துச் சென்றுவிட்டது. மறுநாள் அவர் தமக்குச் சொந்தமானது ஏதாவது எஞ்சியுள்ளதா என்று பார்க்க அங்கே மிதந்துகொண்டிருந்த குப்பைகளுள் தேடினார்.

"திடீர் என அவரின் கண்கள் அங்கே பிரகாசித்துக்கொண்டிருந்த ஒரு பொருளை நோக்கிச் சென்றது. அந்தப் பாத்திரம் அங்கே சூரிய ஒளியில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சமுத்திரம் அதை எப்படியோ மீளக் கொடுத்துவிட்டது." மஹராஜி அந்த பிரகாசிக்கும் பாத்திரத்தை வாழ்வுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

இந்தக் கதை எதற்காக முக்கியம் பெறுகின்றது? என அவர் கேட்கின்றார். "இதுதான் உங்கள் வாழ்வு. இது உங்கள் உயிர் வாழ்வு. இது உங்கள் நேரம். அதைப் பிரகாசிக்கச் செய்யுங்கள். களங்கமில்லாமல் பிரகாசிக்கச் செய்யுங்கள். கடற்கோள் எப்பொழுது வரும் என்று உங்களுக்குத் தெரியாது. கடற் கோள் வரப்போகின்றதா இல்லையா என்பதல்லக் கேள்வி. அது வந்து தாக்கத்தான் போகின்றது. அது வந்து தாக்கும் போது எங்களுடையது என நாம் பெருமைப்படும் அனேக விடயங்கள், எங்களுடையன என நாம் முத்திரை குத்தியுள்ள அந்த விடயங்கள் தொலைந்து போகப்போகின்றன."

இலகுவில் அழிந்து போகக்கூடிய விடயங்களைப் பெறுவதில் அதிகளவு முயற்சியைப் போடுவதற்குப் பதிலாக உயிர் வாழ்வில் கவனத்தைச் செலுத்தும்படி மஹராஜி மக்களை ஊக்கமூட்டுகிறார்.- நாம் செய்யும் விடயங்களுக்கு எல்லாம் உதவியளிக்கும் அந்த உயிரில் அவதானத்தைச்ச செலுத்தும்படி அவர் கேட்கிறார். உயிர் இல்லாமல் எம் வாழ்வில் எந்த நிகழ்சித்திட்டமும் இருக்க முடியாது.

"அந்தப் பாத்திரத்தின் உவமானத்தின் மூலம் அந்த எதிர்மாறான விடயத்ததை மிக அழகாக நான் காண்கிறேன். அழிவின் மத்தியிலும் , அந்தச் சூறையாடலின் மத்தியிலும் அந்தப் பாத்திரம் பிரகாசிக்கிறது. அது பிரகாசிக்கிறது. அது தன்னை ஒளித்து வைக்கவில்லை. யாரோ ஒருவர் நேரம் எடுத்து அதை மினுக்கித் துப்புரவாக்கி வைத்திருந்தபடியால் அது மிகப் பிரகாசமாக ஒளிவிட்டுக்கொண்டிருந்தது.

"நாம் ஒவ்வொருவரும் ஒரு பாத்திரம் . அந்தப் பாத்திரம் பிரகாசிக்கிறதா இல்லையா என்பதை நாம் ஒவ்வொருவரும் எம்மிடம் நாமே கேட்டுக்கொள்ள வேண்டும். எங்களுடைய பிரச்சினைகளால் எல்லாம் அது மாசுபடுத்தப் பட்டுள்ளதா? எங்கள் எண்ணக் கருத்துக்களால் அது மாசு படுத்தப் பட்டுள்ளதா?"

"இந்தப் பாத்திரத்தைப் பிரகாசிக்கச் செய்யுங்கள். அப்போது அது வாழ்வதன் அர்த்தம் என்ன என்பதைத் தெளிவாகப் பிரதிபலிக்கும்." மக்கள் வெளிப்புற விடயங்களால் தாக்கப்படாத, அமைதியையும் தெளிவையும் கொண்ட உள்ளே உள்ள ஒரு இடத்தை கண்டுகொள்வதற்கு மஹராஜி தனது உதவிகளை நல்கின்றார். இந்த உலகம் தரும் வெகுமதிகள் எல்லாம் மாயையானதாகவும் நிரந்தரமற்றதாகவும் இருக்கும் பொழுது உள்ளே உள்ள அமைதியின் அனுபவத்தில் கவனம் செலுத்துவதால் கிடைக்கும் பரிசானது, உடனடியாகக் கிடைக்கக் கூடியதும் - வெளிஉலகில் என்ன நடந்தாலும் அதனால் பாதிப்படையாமல் வாழ்நாள் முழுவதும் நிலைத்து நிற்கக்கூடியதுமாகும்," என மஹராஜி கூறுகிறார்.

"உங்களால் எவ்வளவற்றைச் சாதித்துக்கொள்ள முடியும் என்பதே இந்த உலகம் உங்களுக்குவிடும் சவாலாகும். உள்ளத்தின் சவாலானது, உங்களால் எவ்வளவு ஆனந்தத்தைத் தாங்கிக்கொள்ளமுடியும்?.அதில் இருந்து உங்களால் எவ்வளவு மகிழ்ச்சியை அனுபவிக்க முடியும்? உங்களால் எவ்வளவு நிறைவடைய முடியும்?" என மஹராஜி கூறுகிறார்.

உள்ளே உள்ள நிறைவை அடைவது கடினமான விடயம் என நினைப்பவர்களுக்கு பதில் அளிக்கும்பொழுது மஹராஜி உள்ளத்தின் அழைப்பை புறக்கணிப்பதுதான் கடினமான விடயம் என நான் கூறுவேன் . அது கடினமானது. எனினும் இதைத்தான் நாம் செய்கிறோம், அதனால் தான் எல்லாம் கடினமானவையாகத் தோன்றுகின்றன. எனக் கூறுகிறார்.

அவர் குறிப்பிடும் ஆனந்தத்தில் வாழ்வதற்கான சாத்தியத்தை ஏற்றுக்கொள்வதே முதலாவது அடி என அவர் கூறுகின்றார்.

"இந்த வாழ்வு மிகவும் அழகானது" என அவர் கூறுகின்றார். அதனால்தான் அது உங்களுக்குத் தரப்பட்டுள்ளது. நீங்கள் அதைக் கேள்வி கேட்காமல் அல்லது சவால் விடாமல் அதை ஏற்றுக்கொள்ள ஆரம்பிக்கும் நாளில் இருந்துதான் அதன் அழகு போற்றப்படுகிறது.

"உங்கள் வாழ்வையம் அந்தக் கோப்பையைப் போல் பிரகாசிக்க விடுங்கள், கடற்கோளினால் கூட அதை எடுத்துச் செல்ல முடியவில்லை. அதை துலங்க விடுங்கள். இதுதான் அந்தச் சாத்தியம்: அமைதி, ஆனந்தம்,நிறைவு. அதை உங்கள் வாழ்வில் ஏற்றுக் கொள்ளுங்கள்,ஏனெனில் இதற்காகவேதான் நாம் இங்கு இருக்கிறோம்.

**For more information visit,**
**416 431 5000**
**www.wopg.org**
**www.tprf.org**

# கண்ணீர் சிந்தும் சொர்க்கபுரி

## வரலாறு மற்றும் முரண்பாட்டினூடான ஒருபயணம்

ராவய என்ற சிங்கள வாரவெளியீட்டின் ஆசிரியர் விக்டர் ஐவன் அவர்களால் ஆய்வு செய்யப்பட்டு வெளியிடப்பட்ட நூல் கண்ணீர் சிந்தும் சொர்க்கபுரி. இந்நூலில் விக்டர் ஐவன் இலங்கையின் இனக்கலவரத்தின் வரலாற்று ரீதியான கூர்ப்பினை மிகவும் காத்திரமான வகையில் காட்டுகிறார். சுமார் 190 வருடங்களுக்கும் மேலான ஒரு நீண்ட காலப்பகுதியை இப்புத்தகம் கடந்து செல்கின்றது.

“உலகிலே தான் விஜயம் செய்த எல்லா நாடுகளிலுமே இலங்கை தான் சிறந்தது” என்று மார்க்கோ போலோ கருதியமை ஒன்றும் ஆச்சரியமளிக்கும் விடயமல்ல. இலங்கை வனப்பு மிக்க ஒரு நாடு மாத்திரமன்றி இயற்கை வளங்களினாலும் நிரம்பியிருக்கிறது. அது மட்டுமன்றி மிகவும் முன்னேற்றமடைந்த ஒரு புராதன நாகரீகத்தை சேர்ந்தது. ஆனால் கூர்மையடைந்து செல்லும் இனமுரண்பாட்டின் செயற்பாடுகளினால் முப்பது வருட கால அரசியல் ரீதியான போராட்டம் எனவும் முப்பது வருடகால ஆயுதப்போராட்டம் எனவும் இன்னமும் முடிவுறாத இனச்சிக்கலுக்குள் சிக்குப்பட்டிருக்கும் இலங்கை இன்றும் கண்ணீர் சிந்தும் சொர்க்கபுரிதான். கிடைப்பதற்கு மிகவும் அரிதான இந்நூலில் இருந்து நன்றியுடன் ஆதவன் வாசகர்களுக்கு தொடராக தருகின்றோம். - ஆசிரியர்.

## 01 - பிரபுத்துவ முறைமையிலிருந்து முதலாளித்துவ முறைமைக்கு

இலங்கையானது பிரித்தானியாவின் காலணியாதிக்கத்தின் கீழ் வந்தபோது அதன் பிரபுத்துவ முறைக்குரிய உற்பத்தியானது முதலாளித்துவ முறைமைக்குரிய தொன்றால் மாற்றீடு செய்யப்பட்டது. அரச சேவையின் அடிப்படையிலே செயற்பட்ட பிரபுத்துவ முறைமையானது இல்லா தொழிக்கப்பட்டு, முதல் தடவையாக மக்கள் தமது சொந்த தொழிலை தாமே தெரிவு செய்கின்ற உரிமை வழங்கப் பட்டது. சாதி அடிப்படையிலான உயர்வு மற்றும் தாழ்வு மட்டங்கள் உத்தியோக பூர்வமாக அகற்றப்பட்டு சட்டத்தின் கீழ் மக்கள் சமனாக மதிக்கப்பட்டனர். இந்த கால மாற்றமானது, குடும்ப உறவுகளினுடாக ஆட்சியாளர்களை தெரிவு செய்கின்ற முறைமைக்குப்பதிலாக வாக்குகளின் மூலம் அவர்களை தெரிவு செய்கின்ற முறைமைக்கும் வித்திட்டது.

இக்காலப் பகுதியில் ஏற்பட்ட இரண்டு பிரதானமான மாற்றங்களானவை, ஒரு புதிய பிராந்திய ரீதியிலான முறைமை மற்றும் வர்த்தகத்தின் அடிப்படையிலான ஒரு நவீன பொருளாதார முறைமை ஆகியவற்றை உள்ளடக்கியிருந்தது. இது போக்குவரத்து மற்றும் தொலைத்தொடர்பில் பெரும் நன்மைகளை ஏற்படுத்தியது. இதன் விளைவாக இலங்கையானது பொருளாதார ரீதியாகவும் அரசியல் ரீதியாகவம் ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு தேசமாக ஆகியதால் ஒரு நவீன சமூகமாக மாற்றம் பெற்றது..

எவ்வாறெனினும், பிரிட்டிஷ் காலணியாதிக்கத்தினால் ஏற்படுத்தப்பட்ட மாற்றங்கள் இலங்கையின் நன்மைகளை கருதியதாக இருந்திருக்கவில்லை. தமது ஏகாதிபத்திய ஆதிக்கத்தை வலுப்படுத்துவதற்கும் முடிந்தளவிற்கு இலாபத்தை அறுவடை செய்து கொள்ளுவதற்குமாகவே இலங்கையை அவர்கள் ஆக்கிரமித்திருந்தனர். 1817 மற்றும் 1848 இல் நடைபெற்றது போல அவர்களது ஏகாதிபத்திய ஆதிக்கம் சவாலுக்குள்ளான போதெல்லாம் இரக்கமற்ற முறையில் அந்த சவால்களை அவர்கள் முறியடித்தனர்.

இலங்கையிலே பிரித்தானியர்களினால் அறிமுகப்படுத்தப்பட்ட முறையானது முழுமையாக பூரணப்படுத்தப்பட்ட ஒரு முதலாளித்துவமாக அன்றி, ஒரு உருக்குலைந்த தன்மையான முதலாளித்துவமானதாகவே காணப்பட்டதாகவும் வாதிடப்பட முடியும். இந்த முறைமையின் கீழ் எழுச்சிபெற்ற முதலாளித்துவ வர்க்கமானது கைத்தொழிற் தலைநகரத்தை விடவும் வர்த்தகத் தலைநகரத்தினையே பிரிதிநிதித்துவம் செய்தது. இந்த வர்க்கமானது இலங்கையின் முதலாளித்துவவாதிகளைக் காட்டிலும் வெளிநாட்டவர்களையே கூடுதலாகக் கொண்டதாக இருந்தது. அத்துடன், பிரதான உழைக்கும் வர்க்கமானது குடியேற்றவாசிகளை உள்ளடக்கியிருந்தது. ஒரு ஐக்கியப்பட்ட தேசம் இல்லாமல் ஒரு தேசிய ரீதியான நாடு உருவாக்கப்பட்டது. இத்தகைய வரையறைக்கு மத்தியிலும், பிரித்தானிய காலணித்துவ காலப் பகுதியில் ஏற்பட்ட பெரும்மாற்றங்களானவை நாட்டிற்கு முற்போக்கானதாகவே காணப்பட்டது.

**பிரித்தானியாவின் ஆக்கிரமிப்பிற்கு இலங்கை அடிமையாதல்.**

கண்டி இராஜ்ஜியம் அமையப் பெற்றுள்ள பூகோள அமைப்பின் காரணமாக அதனை வெளிநாட்டவர்களால் கைப்பற்ற முடியாதென்ற நம்பிக்கை சிங்களவர்கள் மத்தியில் வேரூன்றி இருந்தது. ஆனால் இந்தப் பிரபல்யமான நம்பிக்கையை பொய்யாக்கி 1815 பெப்ரவரி 15 ஆம் திகதி பிரிட்டிஷ் படையினர் கண்டி இராஜதானியை கைப்பற்றியதோடு அரசரையும் சிம்மாசனத்திலிருந்து வெளியேற்றினார்கள். கண்டியின் மேல் குழும சமூகத்தின் ஆதரவுடனேயே இது இடம்பெற்றது. போர்த்துக்கேயராலும் ஒல்லாந்தர்களாலும் கைப்பற்ற முடியாது போன கண்டி இராஜதானியை ஒரு துப்பாக்கி வேட்டையேனும் தீர்க்காது பிரிட்டிஷ் படையினர் கைப்பற்றினர்.

1985 மார்ச் மாதம் 2ஆம் திகதி கண்டி இராஜதானியை நிலப் பிரபுக்களுடன் ஆளுநர் உடன்படிக்கை ஒன்றை செய்து கொண்டார். 2300 வருட காலம் சிங்கள அரசர்கள் ஆட்சி செய்த கண்டி இராஜதானியும் இந்த உடன்படிக்கையின் பின்னர் பிரிட்டிஷ் அரசர் இலங்கையின் அரசராகவும் விளங்கும் நிலை உருவானது.



**1. சிங்களவர்களின் கடைசி அரசன் ஸ்ரீவிக்கிரம இராஜசிங்க (1798-1815)**

தென்னிந்தியாவின் நாயக்கர் வம்சத்தை சேர்ந்தவர் ஸ்ரீவிக்கிரமசிங்க அரசர். ஆனாலும் கண்டிச் சிங்களவர்கள் அவரை சிங்கள அரசராகவே மதித்து கெளர வித்தனர். அன்றைய காலத்தில் இனங்கள் வர்க்க ரீதியாக பிரிக்கப்பட வில்லை. கலாச்சார பண்புகளைக் கொண்டே அடையாளப்படுத்தப்பட்டனர். ஜனாதிபதி ஜே.ஆர்.ஜயவர்த்தனவின் பாட்டனார் டொயிலியின் உளவாளியாகவும் அரசரைக் கைது செய்யும் கைங்காரியத்திற்கு உதவினர். அரசரைக் கைதுசெய்து வேலூருக்கு நாடு கடத்தினர் இதனோடு கி.மு.543 கால கட்டத்தில் விஜயகு மாரருடன் ஆரம்பமான சிங்கள அரசர் பரம்பரை முடிவுக்கு வந்தது.



**4. கல் விகாரை : (1879-71)**

பிரித்தானிய இராணுவத்தில் பணிபுரிந்த இளம் அதிகாரி பனொன் என்பவரையே பொலநறுவையின் தொன்மைமிகு சிதைந்த நகரை மீளக் கண்டுபிடித்த பெருமையைச் சாரும். தனது கண்டுபடிப்பு தொடர்பாக அவரால் எழுதப்பட்ட குறிப்பு 1820ஆம் ஆண்டு ஒகஸ்ட் முதலாம் திகதி வெளியிடப்பட்ட வர்த்தமானியிலும் பிரசுரிக்கப்பட்டுள்ளது. சிதைவுற்ற பகுதிகளை அளவிடும் மற்றும் வரையும் பணிகள் 1897இல் ஆரம்பமானது. சிதைந்த நகரைப் பாதுகாக்கும் நடைமுறை 1901இல் ஆரம்பிக்கப்பட்டது. பொலநறுவை சிங்கள மக்களின் மிக முக்கியமான இராஜதானிகளில் ஒன்றாகத் திகழ்ந்தது. (அரச மாளிகை, கோட்டைகள், கொத்தளங்கள், வாசஸ்தலங்கள், அரச குளியல்பொதிகை, மருத்துவமனைகள்) ஆகியவற்றை உள்ளடக்கிய மாபெரும் கட்டுமான பணிகள் 42ஆண்டு காலப்பகுதிக்குள்ளாகவே பூர்த்தி செய்யப்பட்டமை குறிப்பிடத்தக்கது. அனுராதபுரத்தைப் போலன்றி பொலநறுவையின் கட்டட வடிவங்கள் இந்துக்களின் நாகரீகத்தையும் தமிழர்களின் கலாச்சாரத்தை உள்வாங்கியதாகவும் அவற்றால் ஆதிக்கம் செலுத்தப்பட்டதாகவும் காணப்படுகின்றன.

**2. ஆளுநர் சேர் றொபர்ட் பிரவுன்ரிங் (1812-1820)**



போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் மற்றும் முன்னைய பிரிட்டிஷ் குழுக்களால் கைப்பற்றப்பட முடியாமலிருந்த கண்டி இராஜதானியை ஒரு துப்பாக்கி வேட்டினையேனும் தீர்க்காமல் கைப்பற்றியமைக்காக ஆளுநர் ரொபேட்பிரவுண்றிக் பெரிதும் பெருமை பெறுகிறார். இந்த சாதனைக்காக மூன்றாவது ஜோர்ஜ் மன்னன் இங்கிலாந்து அரசனின் கேடயத்தை அணிந்து கொள்ளுவதற்கான உரிமையினை வழங்கினார்: கண்டிய இராச்சியம் கைப்பற்றப்பட்டு மூன்று ஆண்டுகளின் பின்னர் ஏற்பட்ட கிளர்ச்சியை கொடூரமான முறையில் அடக்கியவர் ரொபேட் பிரவுண்றிக்கே, கிளர்ச்சியுடன் தொடர்புபட்டிருந்த சகல கண்டிய தலைவர்களையும் இவர் சிரச்சேதம் செய்திருந்தார்.



**3. தூபாராமய : (1870)**

வரலாற்றுப் புகழ்மிக்க தூபாராம தாதுகோபுரம் தேவநம்பியதிஸ்ஸ அரசரின் நிர்மாணமாகும். தேவாநம்பியதிஸ்ஸ அரசர் அசோகச்சக்கரவர்த்தியின் கால கட்டத்தில் வாழ்ந்தவர். அசோகச்சக்கரவர்த்தியின் மகனான மிஹிந்து மகாநாயக்கரினாலேயே இலங்கைக்கு பௌத்த தர்மம் கொண்டு வரப்பட்டது. இந்தியாவிலிருந்து அபூர்வ சக்தி மூலம் இலங்கை வந்த மிஹிந்து தேரர் அனுராதபுரத்தின் கிழக்குத் திசையிலுள்ள மிஹிந்தலை குன்றில் இறங்கினார். அங்கு விளையாட்டில் ஈடுபட்டிருந்த தேவாநம்பியதிஸ்ஸ அரசரை சந்தித்து அவரை பௌத்த மதத்தில் இணைத்துக் கொண்டாரென மகாவம்சத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. அபூர்வ சக்தி காரணமாக மிஹிந்து மகா நாயக்கரின் தர்மோபதேசம் நாடு முழுவதும் ஒலித்தது. சிங்களவர்கள் பௌத்தத்தின் விஷேட பாதுகாவலர்கள் ஆவார்கள். இலங்கை பௌத்த தர்மத்தின் பூமியாகும் என்ற நம்பிக்கை சிங்களமக்களிடம் காணப்படுகிறது.

# கண்ணீர் சிந்தும் சொர்க்கபுரி.......



5. கண்டி வாவி

மலைநாட்டவர் கண்டி வாவியை ஆரம்பத்தில் பாற்கடல் எனவே அறிமுகப்படுத்தினர். விக்கிரமபாகு அரசனின் கட்டளைப்படி வெற்றிபூமியாக குறிப்பிடப்பட்ட இடத்தில் அகழ்வாராய்ச்சியினை மேற்கொண்டபோது ஹூலங்கமுவ ஆசாரியினது எதிர்வு கூறலுக்கு அமைய பால்ஆமையொன்று கண்டுபிடிக்கப்பட்டது. பின்னர் இது சிறு குளமாக உருவாக்கப்பட்டு பால்ஆமைகளின் வசிப்பிடமாக ஒதுக்கப்பட்டது. இக்குளம் பாற்கடல் என அழைக்கப்பட்டது. பாரியளவில் விஸ்தரிக்கப்பட்ட பின்னர் அது கண்டிவாவிய என் பெயர் பெற்றது. இந்த வாவி ஸ்ரீவிக்கிரம இராஜசிங்க என்ற அரசனால் அமைக்கப்பட்டது.

## சாலைகளையும் பாலங்களையும் அமைத்தல்

இலங்கையில் பிரித்தானிய ஆட்சியின் ஆரம்பகாலப் பகுதியில் ஐரோப்பியர் வசித்திருந்த கடலோரப் பகுதிகள் தவிர, ஏனைய பகுதிகளில் பெருஞ்சாலைகள் எதுவுமிருக்கவில்லை. நடைபாதைகளே இருந்தன. கண்டி இராச்சியத்தைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் கண்டி மன்னர்கள் பெருஞ்சாலைகளை ஏற்படுத்துவதிலிருந்து விலகியிருந்தனர். இருந்தபோதிலும், நாடு முழுவதிலும், சகல திசைகளிலும் இணைக்கும் வகையில் வீதி வலையமைப்பினை ஏற்படுத்தும் பணியை பிரித்தானியர் மேற்கொண்டிருந்தனர்.

கொழும்பிலிருந்து கண்டி வரைக்குமான பெருஞ்சாலையை அமைக்கும் பணி 1821இல் ஆரம்பமானது. இப் பாதையானது அதே ஆண்டில் சரளைக் கற்கள் இடப்பட்டு செப்பனிடப்பட்டு பொது மக்கள் பாவனைக்கு திறந்து விடப்பட்டதுடன், இச் சாலையின் பணிகள் 1831ஆம் ஆண்டு பூர்த்தியாக்கப்பட்டன. இச் சாலையின் இறுதிப் பிரிவானது கடுகண்ணாவை கணவாய் வரை குறுக்கே செல்கிறது. இது கப்டன் பிரான்ஸிஸ் டோசனினால் கட்டப்பட்டது. கொழும்பிலுள்ள களனி கங்கை மாவனல்லையில் உள்ள மகாஓயா மற்றும் பேராதனையில் உள்ள மகாவலி கங்கை ஆகியவற்றுக்கு குறுக்காக பாலங்கள் கட்டப்பட்டன. இந்தப் பாலங்கள் பல்வேறு வடிவங்களில் காணப்பட்டன. கொழும்பிலுள்ள பாலம் இணைப்புப் படகுகளைக் கொண்டதாகவும் மாவனெல்லையிலுள்ள பாலம் செங்கல் பாலமாகவும் பேராதனையில் தனியொரு பவளமரப் பாலமாகவும் (205அடி நீளமான) காணப்பட்டன.

கடுகண்ணாவ, கலக்கெதர மற்றும் ஏத்கல ஆகியவற்றினூடாக கண்டிக்கு மூன்று சாலைகள் கட்டப்பட்டன. கலக்கெதர கணவாய்க்கு குறுக்காக 1921ஆம் ஆண்டு கட்டப்பட்ட பாலம் மூலம் கண்டியுடன் குருநாகலை இணைக்கப்பட்டது. 1825ஆம் ஆண்டு அம்பேபு சவுக்குக்குக் குறுக்கே குருநாகலவிற்கு கொழும்பு-கண்டி பாதையை அடையும் வகையில் ஒரு சாலை அமைக்கப்பட்டது. (இந்தப் பாதை 1827ஆம் ஆண்டு தம்புள்ள வரை நீட்டப்பட்டது.) அத்துடன் 1831இல் கண்டியிலிருந்து மாத்தளைக்கு ஒரு சாலை அமைக்கப்பட்டது. இந்தப் பாலங்களும் சாலைகளும் ஒரு இராணுவ துணைச் செயற்பாடாகவே கட்டப்பட்டன. இதற்கான மனிதவலு இராஜகாரிய முறைமையின் பிரகாரம் பெற்றுக் கொள்ளப்பட்டது. இந்த சாலைகளை அமைப்பதற்கு ஒவ்வொரு மனிதனும் வருடமொன்றில் பதினான்கு நாட்களுக்கு தனது மனித உழைப்பை வழங்குவதற்கு கடமைப்பட்டிருந்தனர். இந்த சாலை வலையமைப்பு தொடர்பாடலை ஏற்படுத்தியது. இதன்போது குதிரைகளும் வண்டிகளும் கொழும்புக்கும் கண்டிக்கும் இடையே தபால்களைக் கொண்டு செல்வதற்கு முடிந்தன.



6. மாவட்ட தலைவர் ஜே.பி.லூவிஸ் கண்டி முக்கியஸ்தர்களுடன் :

அதிகாரத்தில் உச்ச நிலையை அடைந்திருந்த ஐரோப்பிய இனத்தவர்கள் மூவரால் கைப்பற்ற முடியாத கண்டி இராஜதானியை எதுவித போராட்டத்தையும் மேற்கொள்ளாது 1815பிரிட்டிஷரால் கைப்பற்ற முடிந்தது. இதற்கு கண்டி உயர்குல மக்களிடமிருந்து கிடைத்த ஒத்துழைப்பே காரணமாக அமைந்தது. 1815மார்ச் இரண்டாம் திகதி ஆளுநருக்கும், உயர்குலத் தலைவர்களுக்குமிடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின் மூலம் கண்டி உயர்குல மக்கள் தலைவர்களின் உரிமைகள் உறுதி செய்யப்பட்டன. பௌத்த தர்மம் பாதுகாக்கப்படும் என்ற உறுதி வழங்கப்பட்டது. பிரித்தானிய பிரதிநிதிகளின் கண்காணிப்பின் கீழ் கண்டி இராச்சியம் இருந்தபோது நிலம் மக்களால் (உயர் குல மக்கள் தலைவர்கள்) நாட்டைப் பரிபாலிக்கும் கண்டி சம்பிரதாயத்தில் எதுவித மாற்றமும் செய்யப்படவில்லை. ஆனால் 1817இல் இடம்பெற்ற கிளர்ச்சிக்கு கண்டி உயர்குலத் தலைவர்கள் உதவியமை காரணமாக கிளர்ச்சியை தோல்வியடையச் செய்த பின்பு உயர்குலம் அனுபவித்து வந்த சிறப்புரிமைகள் இரத்துச் செய்யப்பட்டன. மக்களிடமிருந்து கௌரவம் மற்றும் பணம் பெறும் உரிமை உட்பட தண்டனை வழங்கும் அதிகாரமும் இரத்துச் செய்யப்பட்டது.

7.ஆளுநர் எட்வட் பார்ன்ஸ் (1924-1835)

வோட்டர் லூ சண்டையில் வெலிங்டன் சீமானுக்கு ஒரு உதவியாளராக ஆளுநர் பார்ன்ஸ் இருந்தார். இவர் சாலைகளை அமைப்பதில் ஒரு முன்னோடியாகத் திகழ்ந்தார். அத்துடன் இலங்கைக்கு வருகை தந்த முதல்சில நாட்களில் இலங்கைக்குள் பயணம் செய்த அவர் பின்வருமாறு கூறினார். “இலங்கைக்கு முதலாவதாகத் தேவைப்படுவது சாலைகள், இரண்டாவதாக தேவைப் படுவதும் சாலைகள், மூன்றாவதாகத் தேவைப்படுவதும் சாலைகளே”.1917ஆம் ஆண்டு கிளர்ச்சியின் பின்னர் தொடர்ந்து பல்வேறு அமைவிடங்களில் கட்டப்பட்ட துறைமுகங்களின் ஊடாக நாட்டை நிர்வகிப்பதே ஒரு கொள்கையாக இருந்து வந்தது. இருந்தபோதிலும் ஆளுநர் பார்ன்ஸ் இதை மாற்றியமைத்தார்.



துறைமுகங்களைக் கட்டுவதில் இருந்து சாலைகளைக் கட்டுவதற்குத் தொடங்கினார். இதன்மூலம் அவசர நிலைமைகளின்போது துருப்புக்களை விரைவாக அனுப்புவதற்கு முடிந்தது. கொள்கையில் ஏற்பட்ட இந்த மாற்றமே மலைநாடு ஒரு தோட்டத் தொழிற்துறையாக மாற்றமடைவதற்கு வழிவகுத்தது.



8. மேஜர் தோமஸ் ஸ்கின்னர் (1804-1877)

ஆளுநர் பார்ன்ஸின் சாலைகளை கட்டுகின்ற கொள்கையை அமுல்படுத்தும் பொறுப்பை ஏற்று மேற்கொண்ட பொறியியலாளரே ஸ்கின்னர் ஆவார். சாலைகளைக் கட்டுவதில் அவருக்கு இருந்த நிபுணத்துவம் மற்றும் நாட்டின் புவியியல் அறிவு ஆகியவை அவரை ஒரு இராணுவ உக்கிரான அதிகாரி என்ற வகிபாகத்தில் இருந்து ஒரு அளவையாளர் நாயகம் என்ற வகிபாகத்தை மேற்கொள்ள வைத்தது. பின்னர் இவர் பெருஞ்சாலைகள் பணிப்பாளராகவும் பதவி வகித்தார். இலங்கையின் கிராமப்புற மக்கள் மீது பெரும் விருப்பை இவர் கொண்டிருந்தார்.

1848ஆம் ஆண்டு கழகம் தொடர்பில் விசாரணை மேற்கொள்வதற்கு அமைக்கப்பட்ட பிரித்தானிய பாராளுமன்றக் குழு முன்பாக பல ஆதாரங்களை முன்வைத்தார். இலங்கையில் பின்தங்கிய பிரதேசங்களில் வாழுகின்ற கிராமப்புற மக்கள்மீது சில ஆளுநர்களினால் காட்டப்பட்ட அசிரத்தையான கொள்கையை இக்குழுவின் முன்பாக இவர் விமர்சித்ததுடன், இந்த ஆளுநர்களின் பெயர்களையும் குறிப்பிட்டு இவர்கள் கிராமப்புற மக்கள் மத்தியில் வெறுமனே ஆதாய நோக்கத்திற்காக சாராய உற்பத்தியை மேற்கொண்டு பரப்பி வருவதாக குற்றம் சாட்டினார்.

# கிழக்கின் கிங் மேக்கர் ஹக்கிம்!

- கிருஷ்ணமூர்த்தி அரவிந்தன்

அரசியலில் சில சமயம் எதிர்பாராத சம்பவங்கள் நடப்பதுண்டு. இந்தியாவில் ஒரு நாள் பிரதமராக சரண்சிங் பதவி வகித்தார். அரசியலுக்காகத் தந்தையையும் கணவனையும் இழந்த காரணத்தினால், நாட்டை விட்டே தொலைதூரத்தில் இருந்த சந்திரிகா யாரும் எதிர்பாராத ஒரு சந்தர்ப்பத்தில் இலங்கையில் ஜனாதிபதியானார். 13 ஆசனங்களை மட்டுமே பெற்ற தமிழர் விடுதலைக் கூட்டணி இலங்கையின் எதிர்க்கட்சியானது. இப்படிப் பல சம்பவங்கள் உண்டு. இதேபோன்ற ஒரு நிலையே இப்பொழுது கிழக்கு மாகாணசபைத் தேர்தல் முடிவுகளை அடுத்தும் ஏற்பட்டுள்ளது. கிழக்கிலே மூன்றாவது நிலையில் இருக்கும் சிறிலங்கா முஸ்லிம் காங்கிரஸ் முதலமைச்சரை நிர்ணயிக்கும் நிலையில் உள்ளது. மட்டுமல்ல ஆட்சியை அமைப்பதற்கான அனுமதியையும் முஸ்லிம் காங்கிரஸே வழங்கும் நிலையில் உள்ளது. முப்பத்தி ஏழு உறுப்பினர்களைக் கொண்ட கிழக்கு மாகாண சபையில் ஆக, ஏழு உறுப்பினர்களையே தெரிவிற் கொண்டுள்ளது முஸ்லிம் காங்கிரஸ். ஆனால், இன்றைய நிலையில் அதுவே பலம்பொருந்திய ஸ்தானத்தில் இருக்கிறது. முஸ்லிம் காங்கிரஸ் இந்தத் தேர்தலில் தோல்வியடைந்துள்ளது என்கின்றனர் சிலர். இல்லை அது பின்னடைவைச் சந்தித்துள்ளது என்று கூறுகிறார்கள் வேறு சிலர். பெரும்பாலான ஊடகங்கள் முஸ்லிம் காங்கிரஸ் தோல்வியைச் சந்தித்துள்ளது



என்றே குறிப்பிட்டுள்ளன. ஆனால், தனித்து நின்றதே அதனுடைய பலம் என்கின்றனர் இன்னொரு சாரார். எது எப்படியோ இன்று மு.கா பலமான ஒரு சக்தி என்ற நிலையில் வந்துள்ளது. கிழக்கிலே பெரும்பான்மைப் பலத்தோடு இல்லாது விட்டாலும் இன்றைய நிலையில் கூடிய உறுப்பினர்களைப் பெற்றிருப்பது அரசாங்கத்தரப்பே. அடுத்தபடியாக இருப்பது தமிழ்த்தேசியக் கூட்டமைப்பு என்கின்ற இலங்கைத் தமிழரசுக்கட்சி. இந்த இரண்டு கட்சிகளுக்கும் இடையிற்தான் இப்போது போட்டி. அரசாங்கம் தானே ஆட்சியமைக்க வேண்டும் என்று நினைக்கிறது. இதற்கு அது மு.காவை அணைத்துக் கொள்ள முயற்சிக்கிறது. இதற்கான பேரம்பேசுதல்கள் நடந்து கொண்டிருக்கின்றன. பேச்சுகள் தொடர்கின்றன.

அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் இது தவிர்க்கவே முடியாத ஒரு வாய்ப்பு. இதை அது இழக்கவே முடியாது. கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை என்ற நிலை உருவாகக் கூடாது என்று அது தீவிரமான முயற்சியில் ஈடுபட்டுள்ளது. இதற்காக அது முஸ்லிம் தரப்போடு எல்லையற்ற சமரசங்களுக்குச் செல்லத் தயாராக உள்ளது என்று தெரிவிக்கப்படுகிறது. இந்த நிலையானது, முஸ்லிம் காங்கிரசுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒரு வாய்ப்பே. அண்மைய நாட்களில் முஸ்லிம் மக்களின் உணர்வுகளைப் பொருட்படுத்தாமல், தென்பகுதியில் இருந்த பள்ளிவாசல்கள் மீது தாக்குதல்களையும் அவமதிப்புகளையும் செய்த அரசாங்கம் அல்லது சிங்களத்தரப்பு இப்போது முஸ்லிம்களின் கால்மாட்டில் குந்திக்கொண்டிருக்கிறது. இதுதான் விதி என்பது. அல்லது இது தான் அரசியல் மாயம் என்பது. இப்போது முஸ்லிம் காங்கிரஸ் அரசாங்கத்திடம் நிபந்தனைகளின் பட்டியலைக் கையளிக்கலாம். முஸ்லிம்களின் பாதுகாப்பு, அவர்களுடைய முன்னேற்றம், அவர்களுடைய எதிர்காலம் என்ற அடிப்படையில் தங்களுடைய பேரங்களை முன்வைக்கலாம். இத்தகைய ஒரு நிலை அரசாங்கத்துடன் இல்லாமல் தனித்து நின்று மு.கா போட்டியிட்டதனாலேயே ஏற்பட்டது. இதற்காக அது பெரும் நெருக்கடிகளையும் சங்கடங்களையும் சந்தித்தது. ஆனால், அவற்றை எதிர்கொண்டதற்கான பெறுபேற்றை அது இன்று கைமேற் பலனாகப் பெற்றுள்ளது. இப்போது அருமையான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. அதை எப்படிப் பயன்படுத்தப்போகிறது மு.கா என்பதைப்பொறுத்தே மு.கா எடுக்கும் தீர்மானமும் அது பெறப்போகிற வெற்றியும் முஸ்லிம்களின் எதிர்காலமும் உள்ளது.

இதேவேளை தமிழரசுக் கட்சியும் விடாப்பிடியாக மு.கா வின் காலடியிலேயே குந்திக் கொண்டிருக்கிறது. முஸ்லிம்களுடன் கூட்டாட்சிக்குத் தயார் என்று தேர்தல் முடிவுகள் வெளியானவுடனேயே சம்மந்தன் அறிவித்திருக்கிறார். எத்தகைய இணக்கப்பாட்டுக்கும் தயார், எத்தகைய விட்டுக்கொடுப்புக்கும் சம்மதம் என்று த.தே.கூட்டமைப்பு பகிரங்கமாகக் கூறியிருக்கிறது. இதுவரையிலும் முஸ்லிம்களைப் பற்றி அவதூறாகவும் நம்பக் கடினமானவர்கள் என்றும் சொல்லிக்கொண்டிருந்த தமிழ்த் தேசியவாதிகள் பலரும் இப்போது முஸ்லிம்களைப் புகழ்ந்து தள்ளுகின்றனர். போதாக்குறைக்கு முதலமைச்சர் பதவியையே முஸ்லிம்களுக்கு கொடுக்கலாம் என்று பரிந்துரைக்கின்றனர். எதைக்கொடுத்தாவது கிடைத்த வாய்ப்பைத் தக்க வைக்க வேண்டும் என்று ஆலாய்ப்பறந்து கொண்டிருக்கிறார்கள் த.தே.கூட்டமைப்பினர். தேர்தற்கால இணைப்பு, அன்புப் பொழிவு, பாச நாடகம் எல்லாம் எந்த அளவுக்கு வெற்றியளிக்கும் என்று தெரியவில்லை. ஆனால், சும்மா இருக்கவே தேடி வந்து கொண்டிருக்கும் இந்த வாய்ப்புகளை என்ன செய்யலாம் என்று தெரியாமல் தடுமாறிக்கொண்டிருக்கிறது மு.கா. ஒரு பக்கம் மோதகம். இன்னொரு பக்கத்தில் கொழுக்கட்டை. இந்த இரண்டில் எதைத் தேர்தெடுப்பது என்பதே இன்று அதற்குள்ள சிக்கல். இந்தச் சிக்கல் தனியே மு. காவுக்கு மட்டுமல்ல, அரசாங்கத்தரப்புக்கும் உள்ளது. த.தே.கூட்டமைப்புக்கும் உள்ளது. ஹக்கீம் என்ன சொல்லப்போகிறார் என்றே இந்த இரண்டு தரப்பும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. இந்த இரண்டு தரப்பு மட்டுமல்ல கிழக்கின் தேர்தலைக் குறித்துச் சிந்திக்கும் அனைவரும் ஹக்கீமையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ஹக்கீம் எத்தகைய முடிவை எடுக்கப்போகிறார், என்ன சொல்லப்போகிறார் என்றே முஸ்லிம்களும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.

பொதுவாகச் சொன்னால் இன்று இலங்கையில் ஒரு கிங் மேக்கராக ஹக்கீம் மாறியிருக்கிறார். கிழக்கைப் பொறுத்தவரையில் அது இலங்கையில் முற்றிலும் வேறுபட்ட ஒரு யதார்த்தத்தைக் கொண்ட பிரதேசம். தமிழ், சிங்கள, முஸ்லிம் சமூகங்களின் கூட்டு கிழக்கில்தான் அதிகம். ஆகவே கிழக்கின் அரசியல் யதார்த்தமும் வேறானது. முற்றிலும் மாறுபட்டது. அவதானமாகக் கையாள வேண்டியது. அப்படிப் பார்த்தால் பொதுவாகவே கிழக்கு அரங்கு எனப்படுவது மிகக் கடினமான ஒன்றுதான். இந்தக் கடினமான அரங்கில்தான் இன்று கடினமான நிலையும் ஏற்பட்டுள்ளது. எல்லோரும் தங்கத் தாம்பாளத்தில் வைத்து வெகுமதியைக் கொடுத்தாலும் அதையெல்லாம் வாங்கிக் கொள்வதற்கு மு.கா தயங்குகிறது. கடுமையாக யோசிக்கிறது என்பதிலிருந்தே இந்தக் கடினமான நிலையை நாம் உணர்ந்து கொள்ள முடியும். ஆனால், இந்த மாதிரியான ஒரு முடிவே பெரும்பாலும் நல்லது. தமிழர்களாலும் சிங்களவர்களாலும் நெருக்கடிக்குள்ளாகிய முஸ்லிம் சமூகத்துக்கு இறைவன் அளித்த கொடை இது என்று ஒரு நண்பர் சொல்கிறார். ஆனால், அதே இறைவன் சோதனையையும் சேர்த்தல்லவா கொடுத்திருக்கிறார். இப்போது ஹக்கீம் என்ன முடிவெடுக்கப்போகிறார் என்று எல்லோரையும் விட முஸ்லிம்களே மிக உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால், ஹக்கீமோ சம்மந்தன், மகிந்த ராஜபக்ஷ, தன்னுடைய கட்சியினர், முஸ்லிம் மக்கள், இந்தியா, அமெரிக்கா எனச் சகல தரப்பாலும் சுற்றிவளைக்கப்பட்டுள்ளார்.

தேர்தலுக்கு முன்னர் இந்தியாவும் அமெரிக்காவும் ஹக்கீமைத் தங்களின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்திருந்தன. இது இலங்கை அரசாங்கத்துக்கு சற்று எரிச்சலை ஏற்படுத்தியிருந்தது. எனினும் இது ஒரு தற்காலிக ஏற்பாடே என்று ஹக்கீம் அரசாங்கத்தரப்பைச் சமாளித்தார். எனினும் இந்தச் சுற்றிவளைப்பு ஹக்கீம் நினைத்ததைப்போல இலகுவில் முடிந்து விடவில்லை. அது மேலும் மேலும் நெருக்கடிகளையே ஏற்படுத்துகிறது. சொந்தக் காலில் நின்று தீர்மானம் எடுக்கும் போதெல்லாம் இந்த மாதிரியான நிம்மதிக் கேடுகள் உருவாகின்றன. இந்த உண்மையை ஹக்கீம் இப்பொழுது நன்றாகவே உணர்ந்திருப்பார். இதில் உள்ள இன்னொரு வேடிக்கை என்னவென்றால், மூன்றாம் நிலையில் இருந்து கொண்டே பெரும் வாய்ப்பைப் பெற்றிருக்கும் மு.கா முடிவெடுக்கக் கடினமாக இருப்பதுதான். ஆனால் மு.கா எடுக்கும் தீர்மானத்தைப் பொறுத்தே தமிழ்த்தேசியக் கூட்டமைப்பின் வெற்றியும் அரசாங்கத்தின் வெற்றியும் உள்ளன. உனக்கு அம்மா பிடிக்குமா, அப்பா பிடிக்குமா என்று கேட்கப்படும் ஒரு குழந்தையைப் போல ஹக்கீம் முன்னிறுத்தப்பட்டிருக்கிறார். ஆனால், என்னதான் இருந்தாலும் யாரைத்தான் ஆதரித்தாலும் இந்தத் தடவை முஸ்லிம்கள் மிகப் பலமாகவே இருக்கப்போகின்றனர். ஆட்சிக் காலம் முழுவதிலும் அவர்கள் கொடிகட்டிப் பறக்கக் கூடிய வாய்புகளே அதிகமாகத் தென்படுகின்றன. இதற்கு இணங்காத போது அவர்கள் தங்களின் ஆதரவை இலகுவில் விலக்கிக் கொள்ளக்கூடும். அப்படி விலக்கிக் கொள்ளும் போது ஆட்சி தானாகவே ஆட்டம் காணும். ஆகவே மு.காவின் நிபந்தனைகள் ஒவ்வொன்றுக்கும் இந்தத் தடவை தங்கக் காசுதான் ஆனால், இதையெல்லாம் தீர்மானிப்பது இந்தியாவா அல்லது அமெரிக்காவா அல்லது ஹக்கீமா அல்லது மு.காவா அல்லது முஸ்லிம் மக்களா? இதுவே இன்றைய கேள்வி. மறுபக்கத்தில் தமிழர்களிற் பெரும்பான்மையானவர்கள் தமிழ்த்தேசியக் கூட்டமைப்புக்கு வாக்களித்து விட்டுக் காத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்களைப் பொறுத்தவரையில் என்ன பாடுபட்டாவது அரசாங்கத்தரப்பை ஆட்சி அமைக்க விடக்கூடாது என்ற எண்ணத்துடன் உள்ளனர். இதற்காக அவர்கள் எதையும் செய்யத் தயாராக இருக்கிறார்கள். தங்களுடைய மூக்குச் சேதமானாலும் பரவாயில்லை. ஆனால் எதிரிக்குச் சகுனம் பிழைக்க வேண்டும் என்பதே அவர்களுடைய எண்ணம். இதற்காக அவர்கள் எத்தகைய தியாகங்களையும் செய்யத்தயாராக இருக்கின்றனர்.

எனவேதான் முஸ்லிம்களுடன் கூட்டாட்சி என்றும் முதலமைச்சர் பதவியை முஸ்லிம்களுக்குக் கொடுப்பதற்குத் தயார் என்றும் சம்மந்தன் எடுத்த எடுப்பிலேயே சொன்னார். அரசாங்கமோ இதையெல்லாம் கடந்து எதையும் செய்யத் தயாராக உள்ளது. ஆனால், என்ன நடக்கப்போகிறது என இன்னும் யாருக்கும் தெரியவில்லை. சோதனை மேல் சோதனை என்ற நிலையில்தான் கிழக்கின் நிலைவரம் உள்ளது. அப்படிப் பார்த்தால் கிழக்கின் தேர்தல் முடிவு இன்னும் தெரியாத நிலையிலேயே உள்ளது. இந்த முடிவை எப்படி அறிவது? எப்போது அறிவது? யார் மூலமாக அறிவது? என்று தூங்காத மனங்கள் கேட்டுக்கொண்டிருக்கின்றன. இதில் கூடுதலாகக் களைப்படைந்திருப்பது இந்தியாவும் அமெரிக்காவுமே என்கிறார் ஒரு நண்பர். அப்படியென்றால், இந்தத் தேர்தல் யாருக்காக? சனங்கள் யாருக்கா? வரலாறு யாருக்காக? என்ற கேள்விகளும் கூடவே எழுகிறது? பொம்மைகளை ஆட்டும் சாவிகளுக்காகத்தான் இதெல்லாமா? எப்படியோ ஹக்கீம் என்ற ஒருவரின் குரல் இதையெல்லாம் எப்படி எதிர்கொள்ளப்போகிறது என்பதிலிருந்தே மற்றவை எல்லாம்.



# திருமலை, மட்டக்களப்பு மாவட்டங்களில் வெற்றி பெற்ற வேட்பாளர்கள்



திருகோணமலை மாவட்டத்தில் தமிழ் தேசிய கூட்டமைப்பில் வெற்றி பெற்ற சி.தண்டாயுதபாணி. கு.நாகேஸ்வரன், ஜே.ஜனார்த்தனன் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தனுடன் நிறபதைக் காணலாம்.





மட்டு. மாவட்டத்தில் தமிழ் தேசிய கூட்டமைப்பில் வெற்றி பெற்ற இரா.துரைரெட்ணம். கே.துரைராஜசிங்கம், இ.நித்தியானந்தன், ஞா.கிருஸ்ணப்பிள்ளை, கே.கருணாகரன், வினோ ஆகியோர் பா.உ. பொன்.செல்வராசாவுடன் நிற்பதைக் காணலாம்.





மட்டு. மாவட்டத்தில் ஐ.ம.சு.மு.வில் வெற்றி பெற்ற எம்.எஸ்.எம்.அமீர்அலி, எம்.எஸ்.எம்.சுபைர்.ஏ.பி.எஸ்.ஜிப்ளி. சி.சந்திரகாந்தன், மு.கா.வின் நசீர் அஹமட், பிரதியமைச்சர் எம்.எல்.ஏ.எம்.ஹிஸ்புல்லா ஆகியோரை படங்களில் காணலாம்.

INCOME TAX SERVICES

# KNN FINANCIAL CORPORATION

Tax Services-
வரிச்சேவை
Cash Accounts
காசுக்கணக்கு
Retirment Savings Accounts
ஓய்வூதிய சேமிப்புத்திட்டம்
Registered Education Saving Plans
பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத்திட்டம்
Retirement Income Accounts
ஓய்வூதிய வருமானக் கணக்கு
Insurance Plans
காப்புறுதித்திட்டம்



**Will Your Money Control You.... You Control Your Money**

## ACCOUNTING & TAX SERVICES - கணக்குப்பதிவியல் & வரிச்சேவைகள்

E-File
Instant Cash Back
Bookkeeping
Small Business, Partnership, Corporations

## INVESTMENTS SERVICES - முதலீட்டுச் சேவைகள்

| Cash Acounts | Retirement Saving Accounts | Retirement Income Accounts |
|---|---|---|
| Individual | Registered Retirement Saving Plan(RRSP) | Retirement Income Fund (RIF) |
| Corporate/Trust | Loked-in RSP(LRSP) | Spousal RIF (SRIF) |
| Joint | Loked-in retirement Acount(LIRA) | Loked-in RIF(LRIF) |
| In trust for Group | Spousal RRSP (SRRSP) | Life Income Fund(LIF) |
| Tax Free Saving Accounts(TFSA) | GROUP RRSP (GRRSP) | |
| | Registered Education Saving Plan (RESP) | |
| | Grant Available upto $ 7,200.00 | |

## INSURANCE SERVICES - காப்புறுதிச்சேவைகள்

Mortgage Insurance
Business Overhead Insurance
Buy/Sell/KeyMan Insurance
Medical Insurance
Criticall Illnes up to 25 Major Illness Covered
Life Insurance
Term, Whole Life (10,20,65,100years Payment)
& UL with Investment

CALL FOR ALL YOUR FREE CONSULTATION

Tel: 416-494-3334 // Cell: 647-282-1877 Fax: 416-494-2224
3351 Markham Rd. (A21-Red Building) Unit123, Toronto, Ontario, M1X 0A6
E mail: Knnfinancial@knnincometax.com

# SLG Fashions



சகலவிதமான ஆடைத்
தெரிவுகளுக்கும்
ஓர் இல்லம்......
**SLG Fashions**





*3351Markham Road*
*Unit A# 101*
*(Markham & Steeles)*
*Scarborough Ont*
*416 297 5565*




எதைத் தேடுகிறீகள்?
நீங்கள் தேடிக் கொண்டிருப்பதை கண்டடைய
அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்...






# The Blessing Centre

## Bellamy/ Progress

ஆசீர்வாத ஞாயிறு ஆராதனை மூன்று இடங்களில்!
(416) 438 - 5200 அல்லது (416) 289 - 3662

**ஸ்காபறோவில்!**
ஞாயிறு - காலை 10.30 மணிக்கு
The Blessing Centre
1180 Bellamy Road North

**மிஸிசாகாவில்!**
ஞாயிறு - மாலை 3.00 மணிக்கு
Equity Plaza - (Hurontario/ Dundas)
3085 Hurontario Street, Unit # 207

**ஸ்காபறோவில்!**
ஞாயிறு - மாலை 6.00 மணிக்கு
The Blessing Centre
1180 Bellamy Road North

பாவ, சாபங்கள் விலகுகின்றன!
வேதனைகள் மாறுகின்றன!
நோய்கள் குணமாகின்றன!
நன்மைகள் பெருகுகின்றன!
அன்புடன் அழைக்கின்றோம். கடந்து வாருங்கள்!

# Toronto Harvest Missionary Church

1180 Bellamy Road North, Scar, ON. M1H 1H2
Tel.: 416.438.5200/ 416-289.3662

www.thmc.net

## கூட்டணி அரசாங்கத்துக்குள் கருத்து முரண்பாடு? அமைச்சர் பஷில் அமெரிக்காவிற்கு விரைந்தார்!

ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி அரசாங்கத்துக்குள் கருத்து முரண்பாடுகள் நிலவுவதாக நம்பகமான வட்டாரங்களிலிருந்து தெரியவருகின்றது. இதனால் மிகவிரைவில் அரச நிறுவனங்களில் பாரிய மாற்றங்கள் இடம்பெறுவதற்கான சாத்தியக்கூறுகள் இருப்பதாக அந்த வட்டாரங்களிலிருந்து தெரியவருகின்றது. இந்த முரண்பாடுகளுக்கு மத்தியில் பொருளாதார அபிவிருத்தி அமைச்சர் பஷில் ராஜபக்ஷ அமெரிக்காவிற்கு விரைந் துள்ளார். அமைச்சர் பஷில் ராஜபக்ஷ கிழக்கு, வடமத்திய மற்றும் சப்பிரகமுவ மாகாணசபைகளுக்கான தேர்தல் நிறைவடைந்ததன் பின்னரே நாடு திரும்புவதற்குத் தீர்மானித்துள்ளதாகத் தெரியவருகின்றது.

கிழக்கு மாகாணசபைத் தேர்தல் பிரச்சாரத்துடன் முன்னெடுக்கப்பட வேண்டிய அபிவிருத்தி நடவடிக்கைகளில் அமைச்சர் பஷில் ராஜபக்ஷ முறையாக செயற்படவில்லை என்று அவர்மீது குற்றச்சாட்டுக்கள் முன்வைக்கப்பட்ட நிலையிலேயே அரசாங்கத்துக்குள் கருத்து முரண்பாடுகள் வலுப் பெற்றதாகத் தெரியவருகின்றது.

இதேவேளை பொருளாதார அபிவிருத்தி அமைச்சர் பஷில் ராஜபக்ஷ வின் அபிவிருத்திப் பணிகளில் ஆளும் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினரும் ஜனாதிபதியின் மகனுமான நாமல் ராஜபக்ஷ அநாவசியத் தலையீடுகளை மேற்கொண்டதையடுத்து அமைச்சர் பஷில் ராஜபக்ஷ அமெரிக்காவிற்கு விரைந்துள்ளதாகத் தெரிவிக்கப் படுகின்றது.

கிழக்கின் நவோதயம் என்ற திட்டத்தை அமைச்சர் பஷில் ராஜபக்ஷவே முன்னெடுத்து வருகின்றார். இந்நிலையில் மட்டக்களப்பிற்கு கடந்த வாரம் திடீரென விஜயம் செய்த நாடாளுமன்ற உறுப்பினர் நாமல் ராஜபக்ஷ ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் பிரச்சாரக் கூட்டத்தை முன்னெடுத்து அபிவிருத்தி திட்டங்களையும் ஆரம்பித்து வைத்துள்ளார்.

அதுமட்டுமன்றி கிழக்கு மாகாண சபைத் தேர்தலில் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரசை ஆளும் தரப்புடன் போட்டியிடுவதற்கு இணங்கச் செய்யும் வகையில் அமைச்சர் பஷில் ராஜபக்ஷ சரியாக செயற்படவில்லை என நாடாளுமன்ற உறுப்பினர் நாமல் ராஜபக்ஷ கடுமையான குற்றச்சாட்டுக்களை முன்வைத்துள்ளார். அதனையடுத்து அரசாங்கத்துக்குள் முரண்பாடுகள் வலுப் பெற்றதாகத் தெரிவிக்கப்படுகிறது.

இதேவேளை இந்த மூன்று மாகாணசபைக்கான தேர்தல் பெறுபேறுகள் அரசாங்கத்திற்கு சார்பாக அமையுமாயின் அமைச்சரவையில் பாரிய மாற்றங்கள் ஏற்படும் என்று அரச உயர்மட்ட வட்டாரங்களிலிருந்து தெரியவருகின்றது. பிரதமர் பதவிகளிலும் மாற்றங்கள் ஏற்படும் என்று தெரிவிக்கப்படுகின்றது. பிரதமர் பதவிக்காக ஏழு பேரின் பெயர்கள் பிரேரிக்கப் பட்டுள்ளதாக தெரியவருகின்றது. பாதுகாப்பு அமைச்சின் செயலாளர் கோத்தாபாய ராஜபக்ஷவை பிரதமராக அறிவிப்பதற்கு ஏற்கனவே கலந்துரையாடல்கள் மேற்கொள்ளப் பட்டதாகவும் அமைச்சின் செயலாளர் களுக்கான பொறுப்புக்களில் அவருக்கு கூடுதலான பொறுப்புக்கள் வழங்குவதற்கு கலந்தாலோசிக்கப் பட்டுள்ளமையினால் பிரதமர் பதவி கோத்தாபாய ராஜபக்ஷவிற்கு வழங்கப்பட மாட்டாது என்றும் தெரிவிக்கப் படுகின்றது.

## மட்டக்களப்பில் துரைரெட்ணத்திற்கு அதிகூடிய விருப்பு வாக்கு முன்னாள் முதல்வர் பிள்ளையான் அரச தரப்பில் முதலிடம்

கிழக்கு மாகாண சபையில் மட்டக்களப்பு மாவட்டத்தில் தமிழ் தேசிய கூட்டமைப்பின் சார்பில் உறுப்பினர்களாக இரா.துரைரெட்ணம், கே.துரைராஜசிங்கம், ஞா.கிருஷ்ணப்பிள்ளை, இந்திரகுமார் பிரசன்னா, கோ.கருணாகரன், மா.நடராசா ஆகியோர் தெரிவு செய்யப்பட்டுள்ளனர். இந்த மாவட்டத்தில் அதிகூடிய விருப்பு வாக்குகளை முன்னாள் மாகாணசபை உறுப்பினர் இரா.துரைரெட்ணம் பெற்றுள்ளார். இவருக்கு 29,148 வாக்குகள் கிடைத்துள்ளன. மட்டக்களப்பு மாவட்டத்தில் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியில் போட்டியிட்ட முன்னாள் முதலமைச்சரும், தமிழ் மக்கள் விடுதலைப் புலிகளின் தலைவருமான சிவனேசதுரை சந்திரகாந்தன் 22,338 விருப்பு வாக்குகளைப் பெற்று அரச தரப்பில் முதலிடத்தைப் பெற்றுள்ளார்.

கிழக்கு மாகாணசபைத் தேர்தலில் மட்டக்களப்பு மாவட்ட விருப்பு வாக்குகள் ஞாயிற்றுக் கிழமை நண்பகல் அறிவிக்கப்பட்டது. இதன்படி இலங்கை தமிழரசுக்கட்சி, தமிழ் தேசியக் கூட்டமைப்பு சார்பில் முன்னாள் கிழக்கு மாகாணசபை உறுப்பினர் இரா.துரைரெட்ணம் 29,148 வாக்குக்களையும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் கே.துரைராஜசிங்கம் 27,719 வாக்குகளையும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் வெள்ளிமலை என்று அழைக்கப்படும் ஞா.கிருஷ்ணப்பிள்ளை 20,200 வாக்குகளையும் வர்த்தகர் இந்திரகுமார் பிரசன்னா 17,304 வாக்குகளையும் முன்னாள் மக்கள் வங்கி முகாமையாளர் மா.நடராசா 16,681 வாக்குகளையும் ஜனா என்று அழைக்கப்படும் கோ.கருணாகரம் 16,536 வாக்குகளையும் பெற்று தெரிவு செய்யப்பட்டுள்ளனர். இதேவேளை ஐக்கிய மக்கள் சுதந்திர கூட்டமைப்பு சார்பாக முன்னாள் முதலமைச்சர் சிவனேசதுரை சந்திரகாந்தன் 22,338, முன்னாள் அமைச்சர் எம்.எஸ்.அமீர் அலி 21,271 வாக்குகளையும் பொறியியலாளர் சிப்லி பாரூக் 20,407 வாக்குகளையும் முன்னாள் மாகாண அமைச்சர் எம்.எஸ்.சுபையிர் 19,303 வாக்குகளையும் பெற்று மாகாணசபை உறுப்பினர்களாக தெரிவாகி உள்ளனர். அத்துடன் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் சார்பாக அக்கட்சியின் பிரதித் தலைவர் ஹாபீஸ் நஷீட் அஹமட் 11,401 வாக்குகளைப் பெற்று தெரிவு செய்யப்பட்டுள்ளார். இந்நிலையில் கொழும்பு மாநகர முன்னாள் பிரதி மேயர் அசாத் சாலி 6,436 வாக்குகளைப் பெற்று ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் பட்டியலில் இரண்டாம் இடத்தினைப் பெற்றுள்ளார்.

## திருகோணமலையில் தண்டாயுதபாணி அதிகூடிய விருப்பு வாக்குகளைப் பெற்றார்.

திருகோணமலை மாவட்டத்தில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் சார்பில் முதன்மை வேட்பாளராகப் போட்டியிட்ட எஸ்.தண்டாயுதபாணி அதிகூடிய விருப்பு வாக்குகளைப் பெற்றுள்ளார். ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பு சார்பாக முன்னாள் மாகாணசபை உறுப்பினர் பிரியந்த பத்திரன முன்னாள் அமைச்சர் றஜீப் அப்துல் மஜிட் மற்றும் கிழக்கு மாகாணசபையின் முன்னாள் பிரதித் தவிசாளர் ஆரியவதி கலபதி ஆகியோர் தெரிவு செய்யப்பட்டுள்ளனர். இதேவேளை இலங்கை தமிழரசுக்கட்சி சார்பில் கிழக்கு மாகாண முன்னாள் கல்விப் பணிப்பாளரான எஸ்.தண்டாயுதபாணி 20,850வாக்குகளையும் குமாரசாமி நாகேஸ்வரன் 10,910வாக்குகளையும் யாழ் பல்கலைக்கழக மாணவரான ஜெகதீசன் ஜனார்த்தனன் 8,560 வாக்குகளையும் பெற்று மாகாணசபை உறுப்பினர்களாக தெரிவாகி உள்ளனர். இந்நிலையில் ஐக்கிய தேசியக் கட்சி சார்பாக கிண்ணியாவைச் சேர்ந்த இம்ரான் மஹ்ரூப், அமைச்சர் விமல் வீரவன்ச தலைமையிலான தேசிய சுதந்திர முன்னணி சார்பாக முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் ஜயந்த விஜயசேகர ஆகியோரும் மாகாணசபை உறுப்பினர்களாக தெரிவு செய்யப்பட்டுள்ளனர்.

**விருப்பு வாக்கு விபரம்.**
**கிழக்கு மாகாணசபைத் தேர்தல் - திருகோணமலை மாவட்டம் - கட்சிகளின் விருப்பு வாக்குகளும் வெற்றி பெற்ற வேட்பாளர்களின் விபரமும் வருமாறு.**

**1).தமிழ் தேசியக் கூட்டமைப்பு**
1.சிங்கார வேலு தண்டாயுதபானி – 20,854
2.குமார சாமிநாகேஸ்வரன் - 10,911
3.ஜெகதீசன் ஜனார்த்தனன் - 8,949

**2).ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னனி**
1.ஆரியவதி சாலவதி - 14,224
2.பிரியந்த பத்திரன - 12,393
3.நஜீப் அப்துல் மஜீத் - 11,726

**3).ஸ்ரீலங்கா முஸ்லீம் காங்கிரஸ்**
1.ரம்ழான் அன்வர் - 10,904
2.ஹசன்மௌலவி - 10,121

**4).ஐக்கிய தேசியக்கட்சி**
1.இம்ரான் மஹ்ரூப் - 10,048

**5).தேசிய சுதந்திர முன்னனி**
1.ஜெயந்த விஜயசேகர - 7,303

## மு.கா. எடுக்கும் எந்த முடிவும் தமிழ் சமூகத்தின் ஆசியுடனே!

**ஹஸனலி தெரிவிப்பு**

“முள்ளின் மேல் விழுந்த சேலை” என்ற நிலையில்தான் இன்று முஸ்லிம் காங்கிரஸ் இருக்கிறது. அதனைக் கவனமாக கையாள வேண்டியது காலத்தின் தேவையாக உள்ளது.

இவ்வாறு நேற்று கருத்து வெளியிட்டார் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரசின் செயலாளர் நாயகம் எம்.ரி.ஹஸனலி, தற்போதுள்ள கிழக்கு மாகாண அரசியல் நிலை குறித்து கருத்து வெளியிட்ட அவர் மேலும் கூறியவை வருமாறு,

கிழக்கில் ஆட்சியமைக்க தமிழ் தேசிய கூட்டமைப்பு விடுத்திருக்கும் வேண்டுகோளை நாங்கள் மிகவும் நற்புணர்வுடனேயே நோக்குகிறோம். இந்த மாகாணத்தில் தமிழ் பேசும் மக்கள் தொடர்ந்தும் பிரிந்திருக்க முடியாது. கட்சி உறுப்பினர்கள், புதிய மாகாணசபை வேட்பாளர்கள் எல்லோரும் ஒன்றுகூடி பேச்சு நடத்தி ஒரு முடிவுக்கு வர வேண்டியுள்ளது. எந்தவொரு முடிவும் தமிழ் சமூகத்தின் ஆசீர்வாதத்துடன்தான் மேற்கொள்ளப்படும். எனவும் அவர் கூறினார்.





## தேர்தல் முடிவுகள் ஒரே பார்வையில்...

| கட்சிகள் | கிழக்கு மாகாணம் வாக்குகள் | ஆசனங்கள் | வடமத்திய மாகாணம் வாக்குகள் | ஆசனங்கள் | சப்பிரகமுவ மாகாணம் வாக்குகள் | ஆசனங்கள் |
|---|---|---|---|---|---|---|
| ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி | 200,044 | 14 | 338,552 | 21 | 488,714 | 28 |
| ஐக்கிய தேசியக் கட்சி | 74,901 | 4 | 196,127 | 11 | 286,857 | 14 |
| இலங்கை தமிழரசுக் கட்சி | 193,827 | 11 | - | - | - | - |
| ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் | 132,917 | 7 | - | - | - | - |
| தேசிய சுதந்திர முன்னணி | 9,522 | 1 | - | - | - | - |
| இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் | - | - | - | - | 25,985 | 2 |
| மக்கள் விடுதலை முன்னணி | 3,154 | - | 16,066 | 1 | 12,164 | - |

# சினிமா சிதறல்கள்..

## கவர்ச்சிக்கு மாறினார் சதா

அந்நியன் படத்தின் மூலம் புகழின் உச்சியை தொட்டார் சதா. அதற்கு பிறகு அவருக்கு சரியான வாய்ப்புகள் அமையவில்லை. புலிவேஷம் என்ற படத்தில் ஆர்.கே என்ற நடுத்தர வயதை தாண்டிய ஹீரோவுக்கு ஜோடியாக நடித்தார். சதாவின் கேரியர் ஏறிய வேகத்தில் இறங்கியது. இனி மீண்டும் உயரத்தைப் பிடிக்க வேண்டும் என்றால் கவர்ச்சிதான் ஒரே வழி என்று முடிவு செய்துவிட்டார். தெலுங்கில் தயாராகி வரும் மைத்திரி என்ற படத்தில் நவதீப்புடன் படுகவர்ச்சியாக நடித்து வருகிறார். லிப்டுலிப்கிஸ், நீச்சல்உடை என்று பின்னி எடுக்கிறார். சதாவை தமிழ்நாட்டில் குடும்ப குத்துவிளக்காகத்தான் பார்த்திருக்கிறார்கள். அவரின் கவர்ச்சி விருந்து தமிழ் ரசிகர்களுக்கு கிடைக்க வேண்டாமா? அதனால் அதே படத்தை மைதிலி என்ற பெயரில் தமிழிலும் தயாரித்து வருகிறார்கள். கவர்ச்சி காட்ட ஏற்ற வகையில் படத்தில் அவர் மாடலிங் செய்பவராகவே நடிக்கிறார்.

## பார்ட்டி கொடுத்தார் பிரகாஷ்ராஜ்!

நடிகர் பிரகாஷ்ராஜ் தான் நடித்த படத்தின் இறுதிநாளில் யூனிட்டை சேர்ந்த அத்தனை பேருக்கும் பார்ட்டி கொடுத்து அசத்தியுள்ளார். வின்சன்ட் செல்வா இயக்கியுள்ள துள்ளிவிளையாடு படத்தில், பிரகாஷ்ராஜ் முக்கிய வேடத்தில் நடித்திருக்கிறார். படத்தின் கதைப்படி ஜெயபிரகாஷ் ஒரு தாதா. அவரிடம் வேலை செய்கிறவர் பிரகாஷ்ராஜ். நகைச்சுவையான கதா பாத்திரம். இந்தப் படத்தின் படப்பிடிப்பு ராஜஸ்தானில் நடைபெற்று முடிவடைந்தது. கடைசிநாள் படப்பிடிப்பு முடிந்ததும், படக்குழுவினர் 150பேருக்கும் பிரகாஷ்ராஜ் தன் சொந்த செலவில் பார்ட்டி கொடுத்தார். பிரகாஷ்ராஜின் பார்ட்டியில் பங்கேற்ற தொழில்நுட்ப கலைஞர்கள், நடிகர், நடிகைகள் பிரகாஷ்ராஜை மனதார பாராட்டினர்கள்.

## பாரதிராஜா படத்தில் அம்மாவுக்காக நடிக்கும் கார்த்திகா!

பாரதிராஜா இயக்கி வரும் அன்னக்கொடியும் கொடிவீரனும் படத்தில் ஆரம்பத்தில் ரொம்ப ஆர்வமாகத்தான் கமிட்டானார் கார்த்திகா. ஒரு கட்டத்தில் அப்படத்திலிருந்த அமீர், விலகியபோது இனியாவையும் நீக்கினார் இயக்குனர். இதனால் நாம்தான் படத்தின் முதன்மை நாயகி என்ற செம உற்சாகத்தில் நடித்து வந்தார். ஆனால் தொடர்ந்து பாரதிராஜா காட்டுப்பகுதிகளிலேயே வெட்ட வெயிலில் படப்பிடிப்பு நடத்தி வருவதால், கோ படத்தில் அலுங்காமல் குலுங்காமல் நடித்த நான் இந்த படத்தில் இப்படி வந்து சிக்கிக்கொண்டேனே என்று புலம்புகிறாராம். அத்தோடு, இன்னும் அரைகிணறுதான் தாண்டியிருக்கிறாராம் இயக்குனர். அதனால் இவர் எப்போது என்னை விடுவிப்பது நான் எப்போது வேறு படத்தில் நடிப்பது என்றும் அம்மா ராதாவிடம் தொடர்ந்து நச்சரித்துக் கொண்டிருக்கிறாராம் கார்த்திகா.

ஆனால் அவரோ, பாரதிராஜா படத்தில் நடிக்க சான்ஸ் கிடைக்காதா? என்று பல நடிகைகள் ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ள மகளுக்கு அட்வைஸ் செய்தபடி சாந்தப்படுத்தி வைத்திருக்கிறாராம் ராதா. ஆக, அம்மாவின் வார்த்தைக்கு கட்டுப்பட்டு தப்பிக்க வழியில்லாமல் அப்படத்தில் நடித்துக்கொண்டிருக்கிறாராம் அன்னக்கொடி கார்த்திகா.



## மீண்டும் படம் தயாரிக்கிறார் ரம்பா

[illegible] திருமணம் செய்து கொண்டு கணவருடன் கனடா நாட்டில் செட்டிலாகி விட்டார்.



அவர் முன்பு தன் அண்ணன் வாசுவுடன் இணைந்து சில படங்களை தயாரித்தார். த்ரீ ரோஸஸ் என்ற படம் எடுத்தார். ஜோதிகா லைலாவுடன் ரம்பாவும் நடித்தார். இந்தப் படம் பெரும் நஷ்டத்தைக் கொடுத்தது. பெரும் கடனில் சிக்கினார் ரம்பா. இந்த நிலையில் இழந்த பணத்தை மீட்டு விடலாம் என்ற நம்பிக்கையில் விடியும் வரை காத்திரு என்ற படத்தை தயாரிக்கத் தொடங்கினார். அந்தப் படமும் ஷுட்டிங் எல்லாம் முடிந்து ரிலீஸுக்குத் தயாராகி ரிலீஸ் ஆகாமல் இருக்கிறது. இந்த நிலையில் தான் பெரும்பணக்கார தொழிலதிபரை திருமணம் செய்து கொண்டு செட்டிலாகி விட்டார் ரம்பா.

ரம்பாவின் அண்ணன் வாசுவிற்கு மீண்டும் படத்தயாரிப்பில் இறங்க ஆசை இருந்து கொண்டே இருந்தது. எப்படியோ தங்கை ரம்பாவின் சிபாரிசில் மீண்டும் படம் தயாரிப்பில் இறங்கி விட்டார். மலையாள இயக்குனர் சித்திக்கின் உதவியாளர் சுரேஷ் என்பவர் இயக்கத்தில் தமிழ் தெலுங்கு இரு மொழிகளிலும் ஒரு படத்தை தயாரிக்கிறார். ஹீரோ தேவயானியின் தம்பி நகுல். விரைவில் இதற்கான முறையான அறிவிப்பு வரும் என்று தெரிகிறது.

## [illegible]

[illegible] வேண்டியவர் சரண்யா. அந்த வாய்ப்பு [illegible] யாக நடித்தார். ஆனாலும் விட்ட இடத்தை [illegible] கங்கணம் கட்டிக் கொண்டு முயற்சியில் [illegible] உட்பட சில படங்களில் நடித்தார். அவை எதுவும் சரியாக போகவில்லை. பேராண்மை வெற்றிபெற்றாலும் சரண்யா அவ்வளவாகக் கவனிக்கப்படவில்லை. ஆனாலும் பெயரை சரண்யாநாக் என்று மாற்றிக் கொண்டு விடாப்பிடியாக இன்னும் முயற்சித்து வருகிறார்.

அவரின் மினி பேட்டி : வெற்றி எல்லோருக்கும் எளிதில் கிடைத்து விடாது. பாலாஜி சக்திவேல் சார் சந்தியாவை சந்திக்கவில்லை என்றால் நான்தான் காதல் படத்தில் கதாநாயகி. இன்றைக்கு நான் இருக்கும் இடமே வேறு. ஆனால் இறைவன் ஆடும் ஆட்டத்தில் நாம் எல்லாம் பொம்மைகள்தானே. இறைவன் ஒன்றைக் கொடுக்க மறுக்கிறான் என்றால் அதைவிட பெரிதாக ஏதோ ஒன்றை கொடுக்கப் போகிறான் என்று பொருள். அப்படித்தான் இதை நான் எடுத்துக் கொண்டேன். இப்போது திருவாசகம், நிர்ணயம், முயல் உட்பட ஐந்து படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறேன். பிரேமெண்ட மயக்கம் என்ற தெலுங்கு படத்திலும் நடிக்கிறேன். முயல் படத்தில் மக்களுக்காக போராடும் போராளியாக நடிக்கிறேன். ஒரு படதலில் பள்ளி மாணவியாகவும் இன்னொரு படத்தில் கல்லூரி மாணவியாகவும் நடிக்கிறேன். தெலுங்குப் படத்தில் கிளாமராக நடிக்கிறேன். நான் நடிக்கும் இந்தப் படத்தில் ஒன்று காதல் படம் மாதிரி அமையாதா? பேராண்மை மாதிரி அமையாதா? என்ற நம்பிக்கைதான் என்னை சினிமாவில் தொடர்ந்து இருக்க செய்கிறது. நிச்சயம் நானும் ஒரு நாள் ஜெயிப்பேன் என்கிறார் சரண்யா நாக்.

## மலேசியாவில் பிறந்தநாள் கொண்டாடிய மோனிகா.

[illegible]

## பிரபுதேவாவை பார்த்து முகத்தை திருப்பிக் கொண்ட நயன்தாரா!

நயன்தாராவுக்காக மனைவியையே பிரபுதேவா விவாகரத்து செய்தது, பிரபுதேவாவுக்காக கிறிஸ்தவ மதத்திலிருந்தே நயன்தாரா இந்துவுக்கு மாறியது என்று எல்லாமே குறுகிய காலத்திற்குள் ஒரு கனவு போல் நடந்தது. ஆனால் இத்தனையும் நடந்தேறிய பிறகு அவர்களுக்கிடையே பிரச்சனை என்றொரு கல் விழுந்து அவர்களது காதல், கண்ணாடியாய் நொருங்கிக்கிடக்கிறது.

இந்நிலையில், பிரபுதேவா இந்தி படங்களை இயக்கிக் கொண்டிருக்க, நயன்தாராவோ தென்னிந்திய மொழிப்படங்களில் பரவலாக நடிக்கத்தொடங்கியிருக்கிறார். ஒருவர் பற்றி ஒருவர் தங்களது அபிமானிகளிடம் காரசாரமாக புகார்களை அள்ளி இறைத்து வந்த போதிலும், நேரில் சந்தித்துக்கொள்வதில்லை, ஆனால் சமீபத்தில் ஒரு தெலுங்கு படப்பிடிப்பிற்கு செல்ல சென்னை விமான நிலையத்துக்கு நயன்தாரா சென்றபோது, பிரபுதேவாவை விட கடும் கோபத்தை முகத்தில் காண்பித்த நயன்தாரா, முகத்தை வேறு பக்கமாக திருப்பி வைத்தபடி அவரை கடந்து சென்று விமானத்தில் ஏறினாராம். சற்று தூரம் கடந்து வந்த படி அவரை திரும்பி பார்த்தபடியே பிரபுதேவாவும் விமான நிலையத்தில் இருந்து வெளியேறியிருக்கிறார்.

## நட்டுனும் ஸ்வாதி அறிவித்த இனிப்பு செய்தி!

[illegible]

## நான் விலகியது சேட்டை அல்ல: வேட்டை ரீ-மேக்! ஹன்சிகா

தமிழ் ரசிகர்களை கிறங்கடிக்கும் நடிகைகள் பட்டியலில், இடம்பெற்றவர்களுக்கு, சவாலாய் சமீபத்தில் இடம் பிடித்தவர் ஹன்சிகாமோத்வானி. "மொளு..... மொளுன்னு...... காஷ்மீர் ஆப்பிளாய், பார்ப்போரை, உறைய வைத்த ஹன்சிகாவின் பின்னணி எத்தனை பேருக்குத் தெரியும்? கர்நாடகா மங்களூரில் பிறந்தார். அப்பா பிஸினஸ் மேன், அம்மா டாக்டர். 2003ல் குழந்தை நட்சத்திரமாக, ஹிந்தி சீரியலில் அறிமுகம் ஆனார். 2004வரை, 7ஹிந்தி சீரியலில் நடித்தார். அதே காலகட்டத்தில், 6ஹிந்திப் படங்களிலும், குழந்தை நட்சத்திரமாக ஜொலித்தார்.

2007ல் "தேச முதுரு" என்ற தெலுங்குப் படத்தில், அல்லி அர்ஜுனாவுடன் நாயகியாக அறிமுகமானார். முதல் படமே, பெயர் சொல்லும்படி அமைந்தது. சிறந்த அறிமுக நாயகிக்கான,"பிலிம் பேர்" விருதையும் பெற்றுத்தந்தது. 2008ல் கந்திரி, 2009ல் மங்கா, 2009ல் பில்லா என தெலுங்கில் பிசி ஆனார், ஹன்சி.

தெலுங்கில் உச்சத்தில் இருந்தவரை, சிகரத்தில் கொண்டு செல்ல முடிவு செய்தது, தமிழ் சினிமா. தனுஸ் படத்தில் கிடைத்த வாய்ப்பு ஜெயம் ரவி உடன் எங்கேயும் காதல், விஜய் உடன் வேலாயுதம், சமிபத்தில் வெளியாகி வெள்ளி விழா கொண்டாடிய ஒருகல் ஒருகண்ணாடி என தமிழில் தனக்கென தனி இடம் பிடித்தார். ஹன்சிகா ஆரியாவுடன் சேட்டை, சிம்புவுடன் வாலு, வேட்டைமன்னன் படங்களில் பிசியாக இருக்கும் ஹன்சிகா சேட்டையிலிருந்து விலகியதாக சமிபத்தில் தகவல் பரவியது.

இது குறித்து ரசிகர்கள் "டு விட்டரில்" கேட்ட கேள்விகளுக்கு, கூலாய் பதிலளிக்கின்றார் ஹன்சிகா. "தேதி காரணமாக, நான் விலகியது சேட்டையல்ல, வேட்டை(ரீமேக்)..." என தெளிவாக கூறிவிட்டது, மங்களுர் மாம்பழம், காத்திருங்கள், விரைவில் காத்திருக்கு, பெரியவிருந்து!.

# நிழலாடும் நிகழ்வுகள்....



கிளிநொச்சியில் நடைபெறும் முரளி கிண்ணத்துக்கான கிரிக்கெட் போட்டியில் கிளிநொச்சி அணியுடன் இலங்கை கிரிக்கெட் அணியின் சங்ககார மற்றும் மஹேல ஜெயவர்த்தன



கிளிநொச்சியில் அமையவுள்ள பல்கலைக்கழகத்தின் பொறியியல்பீடம், விவசாயபீடம் ஆகியவற்றின் ஆரம்பநிலைத்தோற்றங்கள்





- க. கோணேஸ்வரன் -
kones1950@live.com

ஆதவன் பத்திரிகையில் எமது தாயக அரசியல் ஆய்வுக்கட்டுரைகளை தொடராக எழுதிவரும் பிரபல எழுத்தாளரும் கவிஞருமான க.கோணேஸ்வரன் இம்முறை நடைபெறும் கிழக்குமாகாணசபைத் தேர்தலில் திருகோணமலை மண்ணின் வேட்பாளராக போட்டியிடுவதன் காரணத்தால் இம்முறை அவரது அரசியல் ஆய்வுக்கட்டுரை வெளிவரவில்லை. ஆதவனின் அடுத்த இதழில் இருந்து அவரது கட்டுரை தொடராக வெளிவரும் என்பதை வாசகர்களுக்கு தெரியப் படுத்துகின்றோம்.

- ஆசிரியர்

### புதுமைப் பெண்கள்

ஆதவனில் விரைவில் ஆரம்பமாகவிருக்கும் பெண்கள் பகுதிக்கு பெண்கள் தொடர்பான ஆக்கங்களை உங்களிடமிருந்து எதிர்பார்க்கின்றோம்.



## அத்தியாயம் - 12

# வீணையடி நீ எனக்கு..

**வி. மைக்கல் கொலின்**

w.michaelcollin@gmail.com
w.michaelcollin@ymail.com
தொ.இல.0774338878



**(கிழக்குப் பல்கலைக்கழகத்தினை மைய நீரோட்டமாகக் கொண்டு தமிழ்பேசும் மக்களின் கடந்தகால அரசியல் வரலாற்றை பேசும் முதல் நாவல்.)**

கிழக்குப் பல்கலைக்கழக வாசலில் இறங்கிக்கொண்ட ரதனும் நிவேதாவும் பிரதான வாயிலைக் கடந்து உள்ளே சென்றனர். அவர்களைப் போலவே பல மாணவர்களும் மாணவிகளும் உள்ளே வந்து கொண்டிருந்தனர.

பல்கலைக்கழகத்திற்கு எதிரே இருந்த மாணவர் விடுதிகளில் தங்கியிருக்கும் மாணவர்களும் மாணவிகளும்தனியாகவும் குழுக்களாகவும் வந்து கொண்டிருந்தனர். சிலர் துவிச்சக்கர வண்டிகளிலும் சிலர் மோட்டார் சைக்கிளிலும் வந்து கொண்டிருந்தனர். அதிகமாக ஜூனியஸ் மாணவர்களும், மாணவிகளுமே மூன்று நான்கு பேராக கூட்டம் கூட்டமாக வந்தனர்.

"ஓ.... ஊர்ப் பாசம் போல...." அவர் சொல்லிவிட்டு சிரித்தார். தொடர்ந்தும் அவரே.....

"சரி சரி கெதியா.... லெக்ஸசுக்குபோங்க. நீங்க இரண்டு பேரும் போறத கண்டா சீனியர்ஸ் தொல்லைப் படுத்துவாங்கதானே...." பதிவு வேலைகளை முடித்துக் கொண்டு நிவேதா அடையாள அட்டையைப் பெற்றுக் கொண்டதும் இருவரும் உபவேந்தர் அலுவலகத்தை கடந்து வெளியே வந்தனர்.

"நிவேதா, இப்ப எங்களுக்கு ஆங்கில வகுப்புத்தானே நடக்குது.... நான் 'பீ குறூப்.' நீரும் அங்கு வந்து இரும்.... ஆரம்பத்தில் எங்களுக்கு எக்ஸாம் வைத்துதான் 'குறூப்' பிரிச்சவங்க.... இன்னும் இரண்டு வாரம்தானே.....

கிழக்குப் பல்கலைக்கழகத்திற்கு எதிரே உள்ள அந்த நிலப்பரப்பின் பின்பக்கமே விடுதிகள் அமைந்திருந்தன. விடுதிகளில் இருக்கும் மாணவிகள் அங்கிருந்து பல்கலைக்கழகம் வருவதற்கு கிட்டத்தட்ட அரை கிலோ மீற்றர் தூரம் கடந்தே வர வேண்டும். அந்தளவுக்கு விடுதகள் அமைந்திருந்த பிரதேசம் பெரிய நிலப்பரப்பைக் கொண்டிருந்தது. அதன் நடுவே அமைந்திருந்த அந்த சிறிய தார் ரோட்டின் மூலமே நடந்து வர வேண்டும். அதற்கு இரு பக்கமும் புற்கள் வளர்ந்து இருந்தன. சில பிரதேசங்களில் விவசாய செய்கைக் கான பரிசோதனையாக பயிர்கள் நாட்டப்பட்டிருந்தன.

அந்த தார் ரோட்டின் வலது பக்கத்தின் ஓரத்தில் ஒரு சிறிய மாமரம் நின்றிருந்தது. அதன் கீழ் சில சீனியர்கள் 'ராகிங்' செய்து கொண்டிருந்தனர். 'ஜுனியர்ஸ்' மாணவிகள் தமது தலைக்கு மேலே பைல்களை வைத்த வண்ணமாகவும் சிலர் முழங்காலில் நின்றவாறும் ஒரு சிலர் அந்த மரத்திற்கு கீழே விழுந்திருந்த சருகுகளை பொறுக்கியபடியும் இருந்தனர். விடுதிப்பக்கமிருந்து யாராவது விரிவுரையாளர்கள் வந்து விடுவார்களோ என்ற பயம் சீனியர்ஸ் முகங்களில் தெரிந்தது. அவர்கள் விடுதிப் பக்கம் எட்டிஎட்டிப் பார்த்த வண்ணமே தமது ராக்கிங் நடவடிக்கைகளில் இறங்கி யிருந்தனர்.

பல்கலைக்கழகத்துக்குள் அமைந்திருந்த மைதான ஓரங்களில் நின்றிருந்த மரங்களுக்கு கீழேயும் ஒருசில சீனியர்ஸ் ஜூனியர்ஸைப் பிடித்து வைத்துக் கதைத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் கதைப்பது போல் பாவனை செய்தாலும் அங்கும் ராக்கிங்கே நடந்து கொண்டிருந்தது.

ரதனும் நிவேதாவும் உள்ளே நுழைந்ததும் ரதன் நிவேதாவை 'வெல்பெயார் செக்ஸ்ஸனுக்கு அழைத்துச் சென்றான். பல்கலைக்கழக வாசலுக்கு வந்ததுமே நிவேதாவை ஒருவித பய உணர்வு தொற்றிக் கொண்டது. ரதனும் தன்னை சீனியர்ஸ் கண்டு கூப்பிட்டு விடக் கூடாதே என்ற பயத்தில் இருந்தான். எப்படியாவது நிவேதாவினுடைய பதிவு வேலைகள் முடிந்து அவளுக்கு ஐடென்டிக்கார்ட்டை எடுத்துக் கொடுத்து விட்டால் போதும்போல இருந்தது.

'வெல்பெயார் ஷெக்ஸனுக்குள்' செல்லும்வரை ரதனும் நிவேதாவும் கதைத்துக் கொள்ளவில்லை. ஏற்கனவே அவர்கள் கதைத்துக் கொண்டதற்கு ஏற்ப ரதன் முன்னே செல்ல நிவேதா பின்னே சென்றாள். 'வெல்பெயார் ஷெக்ஸனில்' இருந்தவர் மிக இனிமை யாகக் கதைத்தார். "என்ன.... லேட்டா யிட்டிங்க போல, ராக்கிங் பயத்தில வரல்ல போல...." அந்தப் பெண்மணி கேட்கவும், நிவேதா சிரித்துக் கொண்டாள். நிவேதாவின் பதிவு வேலைகளை செய்து முடித்து அவளிடமிருந்த புகைப்படங்களையும் பெற்று அவளது 'ஐடென்டிக்காட்டை' செய்து கொடுத்தார். அத்துடன் ஸ்ருடன்ட் ரெக்கோட் புக்கையும் கொடுத்தார். "பரவாயில்லையே, உமக்கு ஹெல்ப் பண்ண ஒரு ஜுனியர்ஸே வந்திருக் கிறார்.... ராக்கிங்க்கு பயப்படாம அவரே வந்ததை நினைக்க ஆச்சரியமாகத்தான் இருக்குது."

"இல்ல.... மிஸ், இவங்க எங்க ஊர்தான்.... நேற்று என்னோடுதான் வந்தவ.... புதிய இடம்தானே....?"

அதற்குப் பிறகு கோர்ஸ் தொடங்கி விடும்...."

"ரதன், அப்ப நான் உங்களோட 'பீ' குறூப்புக்கே வாறன்.... எனக்கு தனியாப் போக பயமாக இருக்கு ரதன்...."

நிவேதா ரதனைப் பின் தொடர்ந்து அவனுடனேயே சென்றாள். பல்கலைக்கழக பிரதான மண்டபத்தைக் கடந்து விவசாய பீடாதிபதியின் அலுவலகத்துக்குள்ளால் சென்று உள்ளே இருக்கும் விரிவுரை மண்டபத்தை நோக்கி ரதன் செல்ல அவனைப் பின்தொடர்ந்து நிவேதாவும் சென்றாள்.

இடையிடையே தமது விரிவுரைகளுக்குச் சென்று கொண்டிருந்த சீனியர்ஸ் மாணவர்கள் இவர்களைக் கண்டாலும் தமக்கு இருந்த விரிவுரை அவசரத்தில் இவர்களைப் பெரிதாக கண்டு கொள்ளவில்லை.

அதற்கு ஏற்றாற் போலவே ரதனும் நிவேதாவும் ஏதும் கதைக்காமலே சென்றனர். ரதன் தனது விரிவுரை மண்டப வாசலுக்கு வந்ததும் அங்கு நின்று "எக்ஸ்கியூஸ்மீ சேர்" என்றதும் அந்த ஆங்கில ஆசிரியர் தனது கற்பித்தலை நிற்பாட்டி "ஆ.... ரதனா.... வாரும். என்ன லேட்...." என்றார்....

பல்கலைக்கழக நிர்வாகம் ஆங்கில வகுப்பு நடாத்துவதற்கு என்றே தனிப்பட்ட முறையில் ஆங்கிலத்தில் நன்கு திறமையான ஓய்வு பெற்ற ஆசிரியர்களை ஏற்பாடு செய்திருந்தது. அவர்கள் விரிவுரையாளர்களாக இல்லாவிட்டாலும் ஒவ்வொரு ஆண்டும் வரும் மாணவர்களுக்கு மூன்று மாதகால ஆங்கில வகுப்பு நடத்துவதற்கென்றே நியமிக்கப்பட்டிருந்தனர். அதில் ரதனின் 'பீ குறூப்புக்கு' பொறுப்பாக வந்திருந்த ஆங்கில ஆசான் முன்னர் இராமகிருஷ்ண மிஷன் பாடசாலைகளில் கல்வி கற்று அங்கேயே ஆங்கில ஆசிரியராக இருந்து ஆங்கில ஆலோசகராக உயர்ந்தவர்.

அவர் ஆங்கிலத்தில் மட்டுமல்ல, கலை இலக்கியத்துறையிலும் நன்கு ஈடுபாடு கொண்டவராக இருந்தார். வகுப்பில் இலக்கியம் பற்றிக் கதைப்பதிலும் கவிதைகள் பற்றிக் கதைப்பதிலும் அவருக்கு அலாதிப் பிரியம்.

ஒருமுறை அந்த ஆங்கில வகுப்பில் வைத்து அவர் கவிதைகள் பற்றியும் கதைகள் பற்றியும் கதைத்துக் கொண்டிருக்கும் போது சக மாணவன் ஒருவன் ரதனைப் பற்றி "சேர்.... இவரும் ஒரு கவிஞர்தான். கவிதைப் புத்தகமெல்லாம் வெளியிட்டிருக்கிறார்...." என்று சொன்னதும் அவர் ரதனைப் பிடித்துக் கொண்டார். "அப்படியா ரதன்.... கவிதை எல்லாம் எழுதுவிங்களா, குட்.... அப்படித்தான் இருக்க வேண்டும். வெறுமனே புத்தகப் பூச்சாக இருக்கக் கூடாது. இலக்கிய ஆர்வமும் ஈடுபாடும் தான் ஒரு மனிதனை முழுமை யாக்கு கிறது." என்ற வகையில் கதையைத் தொடக்கியவர் அந்த வகுப்பில் ரதனுடன் அதிகம் கதைக்கத் தொடங்கி விட்டார்.

அவரது ரசனையில் நா.பார்த்தசாரதி இருந்தார். அவரது குறிஞ்சி மலர், சத்திய வெள்ளம், பொன் விலங்கு நாவல்கள் அவருக்கு மிகவும் பிடித்திருந்தன. அந் நாவல்களை ரதன் ஏற்கனவே வாசித்திருந்ததால் ஆங்கில ஆசிரியர் சண்முகசுந்தரத்துடன் ஒன்றிப் போக முடிந்தது. எனவே அந்த ஆங்கில வகுப்பில் ரதன் ஒரு குட்டி ஹீரோவைப் போன்று இருந்தான்.

சில வேளைகளில் மற்ற 'குறூப்' ஆசிரியர்களும் இவனது வகுப்பிற்கு வந்து விரிவுரையாற்றுவர்.

அதில் 'டி குறூப்' ஆசிரியரும் ஒரு சிறந்த இலக்கிய ஆர்வமுள்ளவராக இருந்தார். தமிழ், ஆங்கிலம், சிங்களம், பிரெஞ்சு என்று பல மொழிகளில் தேர்ச்சி பெற்ற அவர் சிங்கள டெலி டிராமாக்களில் அதிக பரிச்சயம் பெற்றவராக இருந்தார்.

அந்த வகுப்பிலேயே சிங்கள டெலி டிராமாக்களை விரும்பிப் பார்ப்பவனாக இருந்தவன் ரதன் மட்டுமே. எனவே குறிப்பிட்ட அந்த ஆங்கில ஆசிரியர் வந்து விரிவுரையாற்றும் போதும் அவர் டெலி டிராமாக்களைப் பற்றிக் கதைப்பார். அந்த டிராமாக்களைப் பற்றி அவருடன் கதைப பதற்கு ரதனே முன் நிற்பான். எனவே அவரைப் பொறுத்த வரையிலும் 'ரதனே' ஹீரோவாக இருந்தான். நான்கு குறூப்பையும் சேர்ந்த



...... ஆங்கில ஆசிரியர்கள் தமது இடைவேளையின் போது ரதனைப் பற்றிக் கதைப்பதைப் பலர் அவனிடம் வந்து சொல்லியிருக்கிறார்கள்.

"ரதன், உனது கவிதையைப் பற்றித்தான் மிஸ் கதைத்துக் கொண்டிருக்கிறா...."

"ரதன், நீ ஏதோ டெலி டிராமா கோர்ஸ் ஒன்று செய்திருக்கியாமே, அதப்பத்தித்தான் சேர் கதைத்துக் கொண்டிருந்தவர்."

"ரதன், மாஸ் மீடியா சம்பந்தமாகவும் டிப்ளோமா முடிச்சிருப்பதாக மெடம் கதைச்சுக் கொண்டிருந்தா...."

இப்படியாக பல செய்திகள் ரதனின் காதுகளில் வந்து சேரும். அந்த ஆங்கில பாட வகுப்புகளில் அநேகமானோர் ரதனைப் பற்றியே கதைத்தனர். சிலருக்கு அது எரிச்சலையும் கொடுத்தது. எப்படியாவது ரதனை மட்டம் தட்ட வேண்டும். அவனை அவமானப்படுத்த வேண்டும் என்ற நினைப்பு ஒருசிலர் மனங்களில் எழுந்திருக்கிறது. ஆனால் ஆசிரியர்கள் மத்தியில் ரதனுக்கு நல்ல பேர் இருந்ததால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஒருசிலர் தமக்குத் தெரிந்த சீனியர்ஸ்களிடம் ரதனைப் பற்றி ஏதோ சொல்லி வைத்து அவனுக்கு அதிக ராக்கிங் கிடைக்கவும் வழி செய்தனர்.

ரதனுக்கு ராக்கிங் செய்யவென வரும் சீனியர்ஸ்களில் அதிகமானோர் அவனது கவிப் புலமையைக் கண்டு அவனுக்கு ஒருவித தனிப்பட்ட மரியாதையும் கொடுத்து வந்தனர். சில வேளைகளில் அவனுடன் கதைப்பதை மட்டுமே ராக்கிங்காக செய்தனர்.

கிழக்குப் பல்கலைக்கழக மாணவர்களுக்கென ஒரு அறிவித்தல் பலகை இருந்தது. அதில் மாணவர்கள் தமது திறமையை வெளிப்படுத்தி எழுதும் கவிதைகளை அந்த விளம்பர பலகையில் பலரதும் பார்வைக்காக போட்டு வந்தனர். இது கலைப்பீடத்திற்கு உரியதாக இருந்தாலும் வேறு பெக்கல்டியைச் சேர்ந்த படைப்பாற்றல் மிகுந்த சில மாணவ மாணவிகளின் ஆக்கங்களும் இடம்பெற்று வந்தன.

மாணவர்கள் தமது படைப்புக்களை கலைப் பீட மொழித் துறை தலைவரிடம் சமர்ப்பிக்கவேண்டும். அவர் பார்த்து ஒப்பமிட்டபின்னர் அதனை விளம்பரப் பலகையில் ஒட்டுவார்கள். அந்த விளம்பர பலகை கண்ணாடி 'பிறேம்' போடப்பட்டு எந்நேரமும் மூடப்பட்டே இருக்கும். அந்த விளம்பர பலகையில் ரதனின் அதிக கவிதைகள் இடம்பெற்றி ருந்தன. அவனது கவிதைகள் இல்லாத நாட்களே இல்லை என்ற அளவுக்கு ஏதாவது ஒரு சிறு கவிதை அதிலிடம்பெற்றிருக்கும். அன்றொரு நாள் A DIARY OF UN EMPLOYED என்ற தலைப்பில் மூன்று சிறு கவிதைகளை எழுதிக் கொடுத்திருந்தான். மறு நாள் அந்த விளம்பர பலகைக்கு முன்னால் பலர் ஒருவரை ஒருவர் முட்டி மோதியபடி வாசித்துக் கொண்டிருந்தனர்.

**1)மறுக்கப்படுவதற்காகவோ
பிறப்பெடுத்தன என் கனவுகள்
என் மனப் பிரபஞ்ச விளிம்பில்
உன் நினைவுகளைப் பரப்பி
ஆரம்பம் இதுவென நீ சொன்னாய்
இதுவரையும் அது
ஆரம்பமாகவே
எனக்கான முடிவு தெரியவில்லை.
நான் -
என்ன செய்யட்டும்
என்னைப் பார்த்து
பரிதாபப்பட்டுப் பறக்கும்
அந்த –
சின்னஞ்சிறு பறவையுடன்
நானும் சேர்ந்து பறக்கவா?
இல்லை –
நீ சொல்ல ஏதும் மீதமிருக்கிறதா?
சொல
காத்துக் கிடக்கிறேன்.**

**2)உலகம் உசும்பும்
ஒரு நாள்
இந்த உலகம் உசும்பும்
என் பாடல் கேட்டு
ஆனால்
நீ –
என் பாடல்களைக்கவனிக்காமல்
போய் விடுவாயோ
என்பதே என் கவலை.**

**3)இரவுகளை வழியனுப்பும்
ஓர் இசைப் பாடகனாய் நான்
சோகங்களை மட்டுமே
சுரம் பிரிக்கத் தெரிந்த – நீ
உனக்கான வாழ்த்து மடல்கள்
வந்து குவியலாம்
எனக்கான
வாழ்க்கை மட்டுமே
இங்கு –
கிழிப்பட்டுப் போனது
என்னை அழ விடுங்கள்
உணர்வுகள் குழம்புகின்றன.
நான் -
அவளைத் தேடப் போய்
என்னையே தொலைத்து
விட்டவன்.
1,2,3 என இலக்கங்கள் போட்டு
எழுதப்பட்டிருந்த சிறு கவிதைகள்
அவை.**

(தொடரும்......)

## குறுக்கெழுத்துப் போட்டி இல :- 05

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 01 | 02 | 03 | 04 | 05 | ■ | 07 | 08 |
| 09 | ■ | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | ■ | ■ | ■ | 23 | 24 |
| 25 | 26 | ■ | ■ | 29 | 30 | 31 | 32 |
| 33 | 34 | ■ | 36 | 37 | 38 | ■ | 40 |
| 41 | 42 | ■ | 44 | 45 | 46 | 47 | ■ |
| ■ | ■ | 51 | 52 | 53 | 54 | ■ | 56 |
| 57 | 58 | 59 | 60 | 61 | ■ | 63 | 64 |

போட்டி முடிவுத்திகதி 11.09.2012

**இடமிருந்து வலம்**

1. ஒவ்வொரு வீட்டிலும் முக்கியமாக இருக்கவேண்டிய ஒன்று, நளபாகத்திற்கும் இதற்கும் நெருங்கிய தொடர்புண்டு.
7. உயிரினத்தின் முதற் புள்ளி, இங்கிருந்துதான் அதன் வளர்ச்சி ஆரம்பிக்கிறது. இங்கு இடம்மாறி உள்ளது.
11. சந்தோசம், துக்கம், அவசரம், அழைப்பு என அத்தனையையும் சிரமம் பாராது வீடு தேடி வந்து தருபவர், இங்கு குழம்பியுள்ளார்.
17. தமிழில் மட்டுமல்ல பல மொழிகளிலும் தன் சிறந்த நடிப்பால் பல உள்ளங்களைக் கொள்ளை கொண்ட ஒரு நடிகை, இலங்கைத் தமிழர் ஒருவரை மணந்த இவர் இங்கு குழம்பியுள்ளார்
25. இவளுக்கென்றோர் கீதம் இயற்றினார் விஜய டி ராஜேந்தர், பாசமலரிலும் இப்பாத்திரம் மிகவும் பேசப்பட்டது, இங்கு முன்னெழுத்தின்றி குழம்பியுள்ளாள்.
36. இது என்றதும் அநேகமானவர்கள் முகம் சுழிப்பார்கள், இது தான் எனக்குப் பிடித்தது... இதற்குப் பல விசேடங்கள் உண்டு என ஒரு சினிமாப்பாடல் கூறுகிறது.
41. இதில் பல வகைகள் உண்டு, சிலருக்கு இது ஒரு கொடை என்பார்கள், இதற்காகவே வாழ்ந்தவர்களும், வாழ்ந்து காட்டியவர்களும் உண்டு.
44. ஔவைப் பிராட்டிக்கு நாவல் பழம் தந்த தமிழ்க் கடவுள் இவர், ஆறு என்றால் இவருக்கு மிகவும் பிடிக்குமோ.
51. தொலை துாரத்தில் இருந்து கொண்டு ஒரு சிறிய புழுவைக் கூட மிகத் துல்லியமாகப் பார்க்கக் கூடிய பறவை இது.ஊர்க் குருவியுடன் சம்மந்தப்பட்டது. இங்கு குழம்பியுள்ளது.
57. லட்டுக்குப் பெயர் பெற்ற இடம், இங்கு மொட்டையும் போடப்படுவதால் குழம்பியுள்ளது.
63. கல்யாணத்தின் போது மாற்றப்படும் இது, காதலர்களுக்குப் பிடித்தமான நேரமாம்.

**மேலிருந்து கீழ்**

1. பாண்டவர்கள் தங்கள் அனைத்தையும் இழக்கக் காரணமாக இருந்த ஒரு விளையாட்டு, இன்று சர்வதேச மட்டத்தில் பாடசாலை மாணவரிடையே போட்டிக்காக விளையாடப்படுகிறது. இங்கு குழம்பியுள்ளது.
3. போரின் போது போர் வீரர்களுக்கு ஏற்படும் இது, வெங்காயத்தின் பிற் பகுதியாகும்.இங்கு குழம்பியுள்ளது.
5. தென் துருவத்தில பனியிலான இது, இப்போது உருகத் தொடங்கியுள்ளதாம். தலை கீழாய் உள்ளது.
7. அதர்மத்திற்கு எதிரானவன், உலகில் அநீதியும் அஜாரகமும் தலை துாக்கியுள்ளதால் குழம்பியுள்ளார்.
8. இது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகிறது என்கின்றனர் முன்னோர், ஆனால் இன்றைய இளைஞர்களோ இது கணணியில் நிச்சயிக்கப்படுகிறது என்று கூறுவதாலோ என்னவோ இங்கு குழம்பியுள்ளது.
18. இந்துக்களின் திருமணத்தின் போது மணமகன் அணியும் ஒன்று.இங்கு குழம்பியுள்ளது.
29. சாஸ்த்திர சம்பிரதாயம் பார்த்து அம்மி மிதித்து இதனைப் பார்த்து செய்து வைத்த திருமணங்கள் கூட பிரச்சினைக்குள்ளாவது உண்டு, குழம்பியுள்ளது.
30. தன் மகனால் தான் பசுக்கன்று தேர்க்காலில் சிக்கி இறந்தது என்று தெரிந்தும் நீதியை நிலை நாட்ட தீர்ப்பளித்த மனு நீதிகண்ட சோழன் குழம்பியுள்ளார்.
51. இது செய்வோர்க்கு துன்பமில்லை என்பது ஒருபுறமிருக்க தன் சுயலாபத்திற்காக இது பாடும் பலர் இன்றும் உள்ளனர்.
56. இந்த நேரத்தில் படிப்பதும் பயிற்சி செய்வதும் உடல் ஆரோக்கியத்திற்கும் குறிப்பாக மூளைக்கும் மிகச் சிறந்தது என்கிறது ஆய்வுகள்.

## ஆதவன் சுடுக்கு இல :- 05

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 8 | | | | 9 | | |
| 1 | | 5 | | 8 | | 7 | | 2 |
| | | | 3 | | 2 | | | |
| 8 | | | 1 | | 3 | | | 6 |
| | | 1 | | | | 5 | | |
| 7 | | | 6 | | 9 | | | 1 |
| | | | 7 | | 4 | | | |
| 2 | | 7 | | 3 | | 1 | | 9 |
| | | 4 | | | | 6 | | |

போட்டி முடிவுத்திகதி 11.09.2012

**1 - 9 இலக்கம் கொண்டு குறுக்காகவும்**
**1 - 9 இலக்கம் கொண்டு நெடுக்காகவும்**
**1 - 9 இலக்கம் கொண்டு கட்டம் கட்டமாகவும்**

நிரப்பி ஆதவனுக்கு தொடர்ந்து அனுப்பி வைக்கவும்

Athavan
70-365 Murray Ross Pkwy
North York (Ont) M3J 3T7

பெயர்:.......................................

விலாசம்:...................................

...................................

**குறுக்கெழுத்துப் பேட்டி இல - 03**
சரியான விடை அனுப்பியோர்:
1. மார்க்கம் சந்திரன்
மார்க்கம்

2. உமாமகேஸ்வரன் சந்திரவதன
நோர்த் யோர்க்

**குறுக்கெழுத்துப் பேட்டி இல - 04**
சரியான விடை அனுப்பியோர்:
1 திருமதி ராதா தேவராஜா
மார்க்கம்

**சுடுக்கு 02**
சரியான விடை அனுப்பியோர்
1.உமாமகேஸ்வரன் சந்திரவதன
நோர்த் யோர்க்

**அன்பார்ந்த ஆதவன் வாசகர்களே! மேலே தரப்பட்டுள்ள குறுக்கெழுத்துப் போட்டிக்கான சரியான விடைகளை எமக்கு கிடைக்கும் வண்ணம் அனுப்பி வைக்கவும். சரியான விடைக்கு பரிசு உண்டு. அனுப்ப வேண்டிய முகவரி:**

**"ATHAVAN" 70 – 365, Murray Ross Pkwy**
**North York ONT M3J 3T7**
**TORONTO. CANADA.**
**தொலை நகல்/FAX:647 340 0329**

தயாரிப்பு
நித்திசிவானந்தராஜா

# யார் இந்த வாணா அனா?

வ.அ.என அழைக்கப்படும் அமரர் வ.அ.இராசரெத்தினம் ஈழத்தின் மிக முக்கிய இலக்கிய ஆளுமைகளில் ஒருவர். சிறுகதை, நாவல், கவிதை, விமர்சனம் என பல்துறைகளில் இயங்கிய வ.அ. திருகோணமலை கொட்டியாபுர மண்ணின் இதயமாக இருந்தவர். திருகோணமலையில் முதல் சாகித்திய மண்டல பரிசு பெற்ற "தோணி" சிறுகதை தொகுதியின் சொந்தக்காரர். இவரது "தோணி" சிறுகதை ரஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கது. இந்த வாரம் ஆதவனின் முகப்பை அலங்கரிக்கும் வ.அ. தமிழக எழுத்தாளர்களுக்கு இணையான ஒருவர் என்பது எமக்குப் பெருமையே.

- ஆசிரியர்.

மூதூர்!
முத்துக் குளித்ததால் வந்த பெயர் என்பார் சிலர்.
முது பெரும் ஊர் என்பதால் ஏற்பட்ட பெயர் என்றும் கூறுவர்.
எது எப்படி இருந்த போதும் மூதூர் ஒரு பழம் பெருமை வாய்ந்த கிராமம். இன்று நவீனமயப்படுத்தப்பட்ட பட்டணத்தன்மையுடைய நவீன கிராமம். தமிழ் வளர்த்த குறுமுனி அகத்தியர் தவமியற்றி இறையருள் பெற்ற மண் இது.
சிவபிரானது திருமணக் கோலத்தைக் காணத் தேவாதி தேவர்களும், ரிஷிகளும், முனிவர்களும் கயிலையில் ஒன்றுகூடினர். பாரம் தாங்க முடியாத பூமி ஒரு பக்கம் தாழத் தொடங்கியது. தெற்கு உயரத் தொடங்கியதைக் கண்டு அனைவரும் திகைத்தனர், இதைச் சமன்படுத்த எண்ணிய சிவனார் அகத்தியரை அழைத்து விபரம் கூறி தென்திசை ஏகும்படி மொழிந்தார். தில்லைநாதனின் திருமணக் கோலத்தைத் தாமும் காண ஆவல் கொண்டுள்ளதாக அகத்தியர் சிவனாரிடம் கூறவே, "இக்கோலத்தை அங்கும் காண்பீர்" என மொழிந்தார். அகத்தியரும் தென்திசை வந்தார். பூமியும் சமன்பட்டது. இறைவன் திருவாக்குப்படியே, அகத்தியர் இருந்த இடத்திலேயே, அவருக்கு இறைவன் தன் திருமாங்கல்யதாரண வைபவக் காட்சியைக் காணும்படி அருளினார்.
அந்த இடம் தான் கங்குவேலி - மூதூர் கிராமங்களில் ஒன்று - இங்கு தான் அகத்தியர் தங்கியிருந்து இறைவன் திருமணக்கோலக் காட்சியைக் கண்டார். இங்கு அகத்தியர் லிங்கத்தை பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தமையால் இந்த இடம் "அகத்தியர் தாபனம்" என்ற பெயர் வழங்கப்படலாயிற்று.
இதன் மூலம் மூதூரின் வரலாறு புராதன காலத்தோடு தொடர்புடையதென்பதை நாம் உணரக்கூடியதாக இருக்கின்றது.
"மூதூர்" இது அல்ல இதன் பெயர் அன்றைக்கு 18ம் நூற்றாண்டில் டச்சுக்காரன் இங்கு வருகை தந்தபோது முகத்துவாரத்தை டச்சு மொழியில் "மோதர" என அழைத்தார்கள். இது காலப்போக்கில் மருவி "மூதூர்" என அழைக்கப்பட்டது எனக்கூறுவர். எப்படியிருந்த போதும் இதை அன்றைய மக்கள் கொட்டியாபுரம் என்றே அழைத்தனர். அன்று திருகோணமலை மாவட்டம் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. கங்கைக் கரையின் ஒரு புறத்தையும் - கடலையும் எல்லையாகக் கொண்டு வெருகல் வரை உள்ள நிலப் பரப்பு கொட்டியாபுரப்பற்று என்றும், கங்கையின் மறுபக்கமிருந்து கந்தளாய் வரையுள்ள பகுதி – நிலப்பரப்பு தம்பலகாமப் பற்று என்றும், திருகோணமலை நகரை உள்ளடக்கிக் கொக்குளாய் வரை உள்ள நிலப்பரப்பை கட்டுக்குளப் பற்று என்றும் பிரிக்கப்பட்டிருந்தது.
இக்கொட்டியாபுரப் பற்றின் பழம்பெருமைக்கும் இன்னும் ஒரு சான்று உள்ளது. திருக்கோணேஸ்வர ஆலயத்தின் திருவிழாக் காலங்களில் மட்டுமன்றிப் பூசைநாட்களிலும், தேவையான நைவேத்தியம் மற்றும் பொருட்களும் கொட்டியாபுரத்தில் இருந்தும் தருவிக்கப்பட்டன. சந்தனக் கட்டைகள் கட்டைபறிச்சானில் இருந்தும், மல்லிகைப் பூக்களை மல்லிகைத் தீவிலிருந்தும், பால் தயிர் நெய் முதலியவற்றை ஆனைத்தீவு, சம்பூர் போன்ற கிராமங்களிலிருந்தும், தாமரைஇலை, தண்டு, பூ முதலியவைகளை தாமரைவில்லில் இருந்தும் கொண்டும் சென்று கொடுக்கப்பட்டதாம்.
எனவே கொட்டியாபுரப் பற்றின் பெருமை இன்று நேற்றல்ல, பண்டைக் காலம் தொட்டே இருந்து வந்திருக்கின்றது. கொட்டியாபுரப் பற்றின் ஆதி குடி மக்கள் கடலோரத்தை அண்டியும், வசித்து வந்தனர்.
கடலோரத்தை அண்டிய கிராமங்களாவன:-
1. கட்டை பறிச்சான். 2. சம்பூர். 3. இளக்கந்தை. 4. மட்டப்புக்கழி. 5. இலங்கைத்துறை முகத்துவாரம். 6. கறுக்காய்முனை. 7. வாழைத்தோட்டம். 8. வெருகல்குடித்துவாரம். 9. ஆனைத்தீவு.
கங்கைக் கரையை அண்டிய கிராமங்களாவன:-
1. பச்சநூர். 2. பட்டித்திடல். 3. மல்லிகைத்தீவு. 4. மேன்காமம். 5. நிலாப்பளை 6. கிளிவெட்டி. 7. பள்ளிக் குடியிருப்பு. 8. தோப்பூர். மேற்கூறிய பதினெட்டுக் கிராமங்களையும் உள்ளடக்கியதே அன்றைய கொட்டியாபுரப் பற்று. இந்த ஒவ்வொரு கிராமங்களின் பெயர்களும் காரணப் பெயர்களே. அவற்றை விளக்குவதற்கு இது தருணமல்ல. பிறிதொரு சமயம் பார்க்கலாம்.
இக்கிராமங்களில் வாழ்ந்தவர்களே கொட்டியாபுரப் பற்றின் ஆதிக்குடியிருப்பு வாசிகளாவர். இவர்கள் அனைவரும் இந்துக்களே. கொட்டியாபுரப் பற்றின் எல்லைகளைக் கூறும் போது, கிளிவெட்டிக் கவிஞன் ஒருவனால் பாடப்பட்ட குட்டிக்காளிக் காவியம் என்னும் காவியத் தொகுப்பின் ஒரு பாடல் ஞாபகத்திற்கு வருகின்றது.

**திருமருவு கோணமலை வட சார்பிலாகச்**
**செய்ய வொருவாரிதிரை கீழ் சார்பிலாகக்**
**குருக்கள் எனும் வளகங்கை மேல் சார்பிலாக**
**வெருகலெனும் செழுமைநதி தென் சார்பிலாக.**
**ஆன இந் நான்கெல்லை அமைவாக உள்ள**
**அகமகிழ வளங்கொழிக்கும் செந்நெல் விளை கழனி**
**தேனொழுகு மலர்க்காவும், தீங்கனிக் காடும்**
**செழித்து வளர்கின்ற தொரு சிவபுண்யபூமி.**

கொட்டியாபுரப் பற்றின் செழுமை நிறைந்த கற்பனை வளம் செறிந்து ஓங்கும் அன்றைய அம்மண்ணின் கவிஞனின் கவித்துவத்தை என்னென்று இயம்புவது. கவியாற்றலை எப்படிப் புகழ்ந்துரைப்பது. படிப்பால் வருவதில்லை கவி ஆற்றல், பிறப்பால் அமைந்ததே அந்த ஆற்றல். பட்டணத்திலும் பிறக்கலாம். பட்டிக்காட்டில் பிறக்கும் ஆற்றல் "தண்" என்றிருக்கும்.
1017-1080 க்கு இடைப்பட்ட காலப்பகுதியில் சோழன் இராஜேந்திரன் இலங்கை முழுவதையும் கைப்பற்றிப் பொலனறுவையை (அன்றைய பெயர் ஜனநாத மங்கலம்) தலை நகராகக் கொண்டு ஆண்ட போது, கந்தளாயை ராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்றும் அழைக்கப்பட்டதாக அறியக்கிடக்கிறது. 1638ல் ஒல்லாந்தர் வியாபார நோக்கோடு, கரையோரப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அதற்கு முன் கீழக்கரையில் இருந்து வருகை தந்த அரேபியர்கள் மேற்குக் கரையில் இருந்து கிழக்குக் கரையை நோக்கி நகர்ந்து கொட்டியாபுரத்தை அடைந்து, தோப்பூர் என்ற கிராமத்தை வரித்துக்கொண்டார்கள். இது 1655ம் ஆண்டளவில் நடைபெற்ற நிகழ்வாகும். இவர்கள் இங்கு வந்து குடியும் குடித்தனமும் ஆனார்கள்.
ஆனால், அரேபியரின் வருகைக்கு ஐந்து வருடங்களுக்கு முன்பே கொஞ்சம் கத்தோலிக்கர்கள் கொட்டியாபுரப் பற்றில் தங்கள் கால்களைப் பதித்ததாகத் தெரியவருகின்றது. இவர்கள் தென்பாண்டி நாட்டின் கடலோரக் கிராமங்களில் இருந்து வந்த பரவர்-பட்டையாச்சி என்பவர் எனக் கூறுவர்.
கொட்டியாபுரம் வன்னியரின் ஆட்சிக்காலத்தில் இருக்கையில், வன்னியரான சகோதரர்கள் இருவர்களுக்கிடையே மூண்ட சண்டையில் தம்பி அண்ணனைத் துரத்தி விட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். துரத்தப்பட்ட அண்ணன், பாண்டி நாடு சென்று படை திரட்டி வந்தான். அப்படி வந்தவர்களே பரவர்கள். அவர்களை 1650ல் கொட்டியாபுரத்தில் குடியமர்த்தினான்.
1696ல் இலங்கைக்கு வந்த யோசப்வாஸ் அடிகளார் கொட்டியாபுரப் பற்றிற்கு வருகை தந்தபோது, இங்கு நன்கு பராமரிக்கப்பட்ட கத்தோலிக்க ஆலயம் இருந்ததாகச் சரித்திரம் சொல்கிறது.
கத்தோலிக்கர் பற்றிய சரித்திர தகவல்களை வண.தந்தை டொமினிக் சாமிநாதன், திருகோணமலை மறை மாவட்ட நூற்றாண்டு நிறைவை ஒட்டி "வெட்டாப்பில்" எழுதி வந்த தொடர் கட்டுரையினூடாக அறியக்கிடைக்கின்றது. மூதூரின் மகாவித்தியாலயக் கட்டிட நிர்மாணிப்பிற்காக நொக்ஸ் வீதியில் தோண்டிய போது, கண்டி ராசனான இரண்டாம் செனரதனின் கோட்டை இருந்ததற்கான சான்றுகள் கண்டு எடுக்கப்பட்டதாக கூறப்படுகின்றது.
இத்தகைய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இக்கிராமத்தின் செழிப்பிற்கும் சிறப்பிற்கும் பிரிட்டிசாரின் வருகையும் ஒரு காரணமாகும். இவர்களின் வருகைக்குப் பின் வெருகல் ஆறு மறிக்கப்பட்டு நீர் உள்முகமாகத் திருப்பப்பட்ட பின்னே இப் பிராந்தியம் மேலும் மேலும் செழிப்புற்று விளங்கியதாம்.

**வீணை வேந்தன்**

[illegible]த்திர முக்கியத்துவம் வாய்ந்த கொட்டியாபுரப் பற்று பல [illegible] கொண்டதாக இருந்தது. அடர்ந்த காடுகளையும் [illegible]யும், நீர் வளத்தையும் மணற் பெருக்கையும் கொண்டது மட்டுமன்றி முத்துக்குளிக்கும் துறையை கொண்டதாகவும் இருந்தது.
ஒரு சமயம் இந்த பவள விழா நாயகனோடு உரையாடிக் கொண்டிருக்கும் போது அவர் கூறினார். 'சுவாமி விபுலானந்த அடிகள் பாடிய ஒரு பாடலின் வர்ணனைகளை ஊன்றிக் கவனிக்கும் போது அவர் பாடிய வரிகளுக்கு அச்சாவாக பொருந்துவது எமது கொட்டியாபுரப் பற்றுத்தான்' என்று அழுத்தம் திருத்தமாக அடித்துக் கூறினார்.
அப்பாடலாவது:-

"கன்று குணிவாக் கனிவுதிர்த்த மாயவற்கு
மூவடி மண் ஈந்தளித்து மூவாப் புகழ் படைத்த
மாவலிதன் பேரால் வழங்கு மணி நதியும்
காவும் பொழிலும் கழிமுகமும் புள்ளணிந்த
ஏரியும் மல்கி........"

என்ற வரிகளே. இம்மக்கள் பெரும்பாலும் விவசாயம் செய்தார்கள். புகையிலை தோட்டம் செய்தார்கள். மட்பாண்டம் புனைந்தார்கள். செங்கல் ஓடு செய்தார்கள், மீன்பிடித்தொழில் செய்தார்கள். முத்துக் குளித்திருந்தார்கள்.
காட்டுவளம் நிறைந்திருந்ததன் காரணமாக வீட்டு உபகரணங்களுக்கும் தளபாடங்களுக்கும் வேண்டிய மரங்கள், வேண்டிய இடத்தில் கிடைக்கக்கூடியதாக இருந்தது மட்டுமன்றி கடலோடிகளின் பாவனைக்கும் வேண்டிய உபகரணங்களை செய்வதற்கும் வேண்டிய மரங்களை இங்கிருந்த காட்டில் பெறக்கூடியதாக இருந்தது.
கொட்டியாபுரப் பற்றின் மக்கள் தன்னிறைவு பெற்றிருந்தது மட்டுமன்றி பிற மாவட்டங்களுக்கும் போதியளவு விளைந்திருந்தன.
நான் சிறுவனாக இருந்தகாலை, எனது பெரியதந்தையார் முத்துக்குமார் கொட்டியாபுரத்திலிருந்து நெல், வைக்கோல், சட்டிபானை, செங்கல் ஓடு மற்றும் சவல் தண்டு, நிளை வலை போன்றவற்றிற்கான மரங்களும் வலைக்கு வேண்டிய கண்டல் பெட்டை போன்றவைகளையும் வல்வெட்டித்துறை தண்டயல் செல்லத்துரையின் வத்தை மூலம் கொட்டியாபுரத்திலிருந்து மைலிட்டிக்கு ஏற்றிச் சென்றிருந்ததை நான் நன்கு அறிவேன். கொட்டியாபுரத்திலிருந்து ஆற்று மணல்கூட ஏற்றமதி செய்யப்பட்டுள்ளதாகவும் கூறியுள்ளார்கள்.
இப்பேர்ப்பட்ட செல்வச் செழிப்புற்ற கொட்டியாபுர மக்கள் இலக்கிய வளத்திலும் சிறந்து ஓங்கி இருந்தார்கள். பாடசாலைக் கல்வி அறிவு வசதியில்லாத காலத்திலும், இயற்கையாகக் கவிபுனையும் ஆற்றல் இம்மக்கள் பெற்றிருந்தார்கள். நாட்டார் இலக்கியம் இங்கெல்லாம் கொடிகட்டிப் பறந்தது. அச்சு வசதிகள் இல்லாதபோதும் இவ் விலக்கியங்களை கர்ணபரம்பரையாக மக்கள், மனதில் இருத்தி பாதுகாத்து வந்தார்கள்.
சில ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பட்டிருந்த "கங்கைக்காவியம்" இதற்கு சான்று பகரும். 150 வருடங்களுக்கு முன் மூன்று பெரும் இஸ்லாமிய புலவர்களால் பாடப்பட்ட மூன்று காவியங்களும் வாய்மொழியாகவே காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன.
இந்நூல் வெளி வராமல் இருந்திருப்பின் இக்காவியங்களும் மறக்கப்பட்டு மண்ணோடு மண்ணாகிப் போயிருக்கும். உதாரணத்திற்கு இது ஒன்று. இன்னும் இது போன்ற காவியங்கள் வெளியிடுவார் இன்றி மறைந்து கிடக்கின்றனவோ. குட்டிக் காளிக்காவியத்தின் கதியும் இதுதான்.
கொட்டியாத்துரைப்பற்றின் இலக்கிய வளர்ச்சியில் இஸ்லாமியரின் பங்களிப்பும் நிறையவும் உண்டு.
பட்டணத்தில் பல வசதிகள் இருந்த போதும் தங்கள் படைப்புக்களை நூல் உருவில் கொண்டு வர எவ்வளவு சிரமங்களை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது என்பதை விட அதைச் சந்தைப்படுத்த அசுர சாதனை செய்ய வேண்டி இருக்கிறது. இன்றைய காலகட்டத்தில் ஒரு கிராமத்தின் படைப்பாளியின் நூல் உருப்பெற வேண்டியதைப் பற்றிச் சொல்ல தேவையில்லை.
இதன் காரணமாக எத்தனையோ கிராமத்தில் படைப்பாளிகளின் சிறந்த படைப்புக்கள் போற்றுவார்இன்றியும் ஏற்றுவார் இன்றியும் மங்கி மறைந்து மண்ணோடு மண்ணாகப் போய்விட்டன.
**இப்படிப்பட்ட தொன்மையும் பெருமையும் கொண்ட பல வளங்களோடு இலக்கிய வளத்தையும்கொண்ட கொட்டியாபுரத்தில் தோன்றியவரே இந்த வ.அ. என்ற எழுத்துக்குரிய இலக்கிய [illegible]து.**
**1925 ம் ஆண்டு ஆனித்திங்கள் ஐந்தாம் நாள் (5.6.1925) இவர் மூதூரில் பிறந்தார். தந்தையார் வஸ்தியாம்[illegible] [illegible] அந்தோனியா. இவரின் உடன் பிறப்புக்கள் [illegible] பெண்கள், மூவர் ஆண்கள். வ.அ இரண்டாமவர்.**
**இவர் [illegible]தினிலேயே தன் தந்தை[illegible] [illegible] மனனம் பண்ணி ஒப்புவிப்பார். தந்தையார் [illegible] தாழையூரில் றோமன் கத்தோலிக்கப் பாடசாலையில் [illegible] கல்வியைக் கற்ற இராசரெத்தினம். [illegible] பாடசாலையிலும், அதன் பின் ஆசிரியர் பயிற்சியை [illegible] பயிற்சிக் கலாசாலையிலும் பெற்றார்.**
[illegible] வெளியேறியவரை [illegible] வரவேற்றது. 1948ம் ஆண்டு ஐப்பசி மாதம் 1ம் திகதி [illegible] கல்லூரியில் ஆசிரியராகக் கடமையேற்றார். அதைத் தொடர்ந்து [illegible] கல்லூரி, திருகோணமலை [illegible] கல்லூரி, (1954 – 1958) சம்பூர் மகா வித்தியலயம், [illegible] R.C.TM பாடசாலை, [illegible] அரசினர் தமிழ் கலவன் பாடசாலை, [illegible] அரசினர் [illegible] கலவன் பாடசாலை, சேனையூர் மகா வித்தியாலயம், [illegible] பாடசாலை, L.B.4 (பாரதிபுரம்) அரசினர் தமிழ் கலவன் பாடசாலை [illegible] அரசினர் தமிழ் கலவன் பாடசாலை ஆகியவற்றில் பணிபுரிந்தார்.

(31ம் பக்கம் பார்க்க...)

தமிழ் மொழி மூலம் கல்வி கற்று, ஆசிரியரான போதும், ஆங்கில மொழியையும் ஆங்கிலக் கலை இலக்கியங்களையும் கற்க வேண்டும் என்ற ஆவல் - வெறியடங்கவே இல்லை. சுயமாகவே கற்றார். அதில் ஆழமான அறிவைப் பெற்றார். ஆங்கில இலக்கியங்களைக் கற்றார். கசடறக்கற்றார். மற்றோர் வியக்கும் வண்ணம் பல ஆங்கில இலக்கியங்களைத் தமிழுக்குத்தந்தார். மாப்பசான், அன்ரன் செக்கோவ், மாக்ஸிம் கொர்க்கி, இலயா இல்விச், யூஜீன் பொட்ரோவ், தோமஸ் ஹார்டி, ஜேம்ஸ் ஜோய்ஸ், ஒஸ்காவைல்ட் போன்ற எழுத்தாளர்கள் இராசரெத்தினத்தின் பேனா முனையினூடாகத் தமிழில் கதை தந்தார்கள். (Sacrifice) "சக்றிவைஸ்" என்ற தாகூரின் நாடகம் 1951ல் மொழி மாறியது. காளியையே திட்டுவதாக அனேக காட்சிகளைக் கொண்ட நாடகக்கதை ஊன்றிக் கவனிக்கும் போது கலைஞர். மு.க. அவர்களின் "பராசக்தி" என்ற நாடகத்திற்கு இதுதான் மையக் கருவாக அமைந்திருக்குமோ என்ற ஐயம் என் உள்ளத்தில் எழத்தான் செய்தது என்றார் இராசரெத்தினம்.
இராசரெத்தினம் அவர்களின் எழுத்தாற்றலுக்கு முதன் முதல் களம் அமைத்துக் கொடுத்தது, ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையே. 1946/47ல் மட்டக்களப்பு ஆசிரியர்' பயிற்சிக் கலாசாலை பயிற்சியை முடித்து வெளியேறும் போது ஆக்க இலக்கியத்தைப் படைத்து ஒப்புவிக்க வேண்டிய கட்டாயம் இருந்தது. எனவே இவர் தனக்கு விருப்பமான கவிதை இலக்கியத்தை தேர்ந்தெடுத்த போது தான் எழுதிய கவிதைகளின பக்கங்கள் நூல் உருப்பெற போதாமல் இருக்கவே கட்டுரையை எழுதினார். அதிலும், திருப்தி அடையாமல் போகவே கதை எழுதி அதை நூலாகச் சமர்ப்பித்தார். இதுவே இவரது எழுத்து துறையில் முதற்படைப்பாகும். இதன் பின் அவரது கதை முதன் முதலில் தினகரனில் பிரசுரமாகியது.
இராசரெத்தினம் 1952ம் ஆண்டில் மூதூரைச் சேர்ந்த அந்தோனி றோச்டிவாஸ்-பிரகாசியா தம்பதிகளின் மகளான மேரி லில்லி திரேசா என்பவரை திருமணம் செய்து கொண்டார். இவரும் ஒரு ஆசிரியையே. "பத்தும் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என்பார்கள். இராசரெத்தினம் அவர்கள் அதை மதித்தார். வசந்தவல்லி (ஆசிரியை இமானுவெல் இராசரெத்தினம் (விண்ணில்) ரெக்ஸ் ஜெயரெத்தினம் சுகிர்த வல்லி, தவரெத்தினம் (இந்தியா) அமுதவல்லி (ஆசிரியை), துரைரெத்தினம் (ராகமை), நவாஜி நவரெத்தினம் (குரு-மட்டக்களப்பு) நோயல் அரியரெத்தினம் (பிரான்ஸ்) மேரியன் (டென்மார்க்) ஆகிய பத்துக்கும் தந்தையானார். இவரது குடும்ப வாழ்க்கை இவரது இலக்கியத் துறையை பாதித்ததாக தெரியவில்லை. இராசரெத்தினம் அவர்கள் பேசும் போது சொன்னார். "தன் மனைவிக்கு என்னோடு வாழும் போது இடர்பாடுகள் இருந்தபோதும் நான் ஓர் எழுத்தாளன் என்று மற்றவர்கள் என்னை கௌரவிக்கும் போது அவள் உளமகிழ்ந்தாள்" என்றார்.
இருவரும் ஆசிரியர்களாக இருந்தபோதும் பாடசாலைக் கடமைகளுக்கு மத்தியில் தன் குடும்ப சுமையை பொறுமையோடு சுமந்தார். லில்லி அக்கா குழந்தைகளின் பாராமரிப்பிலோ கணவனைக் கவனிப்பதிலோ, விருந்தினரை உபசரிப்பதிலோ அவர் என்றும் சளைத்ததும் இல்லை களைத்ததும் இல்லை

**அடிசிற்கினியாளே அன்புடைய மாதே**
**பதிசொற் தவறாத பாவாய் அடிவருடிப்**
**பின்தூங்கி முன் எழும் பேதையே போதியோ**
**என்தூங்கும் என் கண்ணிரா.**

என்று வள்ளுவர் வாசுகியின் பிரிவால் நொந்து பாடியது போன்று இராசரெத்தினமும் தன் மனைவியின் பிரிவாற்றாமையை ஒரு காவியம் மூலமாக இறக்கி வைத்தார். ஆம்! தன் மணவாழ்வின் அனுபவங்களை "ஒரு காவியம் நிறைவு பெறுகிறது" என்ற நீண்ட சிறு கதையினூடாக வெளிக் கொணர்ந்தார். அது தமிழ் இலக்கியத்திற்கு ஒரு புதுமை. இன்றுவரை அது போன்ற படைப்பு வெளிவரவில்லை. இவர் தன்னுடைய இளமைக்கால வாழ்வை "மண்ணிற் சமைந்த மனிதர்கள்" நாவலிலும் தன் இலக்கிய வாழ்வை "இலக்கிய நினைவுகள்" என்ற நூல் மூலமும் வெளிக் கொணர்ந்துள்ளார்.
இராசரெத்தினத்தின் எழுத்துக்கள் வெறும் எழுத்துக்கள் அல்ல. ஒரு ஆவணம். அவர் தன்னைச் சூழவுள்ள மண்ணையும் மக்களையும் அவர்கள் பண்பாடுகளையும் தன் ஒவ்வொரு_சிறுகதையிலும் நாவலிலும் பதியவைத்துள்ளார். எனக்குப் பின்னால் வரும் சரித்திர மாணவர்கள், இருபதாம் நூற்றாண்டில் கொட்டியாபுர மக்களின் வாழ்க்கை முறைகளை அறிந்து கொள்ள என் படைப்புக்களை படித்தே ஆக வேண்டும் என்றார். அது நூற்றுக்கு நூறு உண்மையே. குடிமகன் என்ற கதையின் ஊடாக திருகோணமலை மாவட்ட மக்களின் வாழ்வை கண்டு கொண்டது மட்டுமன்றி ஆய்வுக்கும் அதை எடுத்துக் கொண்டதன் முலம் மேற்கூறிய உண்மை புலனாகின்றது. இராசரெத்தினம் அவர்கள் வெறும் படைப்பாளியாக மட்டும் இருக்கவில்லை. ஒரு வெளியீட்டாளராகவும் இலக்கியத் துறைக்கு தன் பங்களிப்பை ஆற்றியுள்ளார். 1917ஆம் ஆண்டு அகிலேசப்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பட்ட "திருக்கரசைப்புராணம்' பாடிய புலவர்-கவிஞர் யார் என்பதை யாரும் அறிந்திலர். கொட்டியாபுரப் பற்றின் சூழலையும்-கங்கையாற்றின் பரிபாகத்தையும் நன்கு அறிந்த ஒருவரால்தான் இதைப் பாட முடியும். எனவே இது கொட்டியாபுரப் பற்றில் வாழ்ந்த ஒரு புலவரால்தான், கவிஞரால்தான் பாடப்பட்டது. என்று அடித்துக் கூறினார் வ.அ.
இப்புராணம் குறிப்பிட்ட காலத்தின் பின் பிரதிகள் கிடைக்காமல் போகவே பல கஷ்டங்களின் மத்தியில் நைந்து கிழிந்து எடுத்த ஓர் பிரதியோடும், சேனையூரில் இருந்து பெறப்பட்ட ஒரு ஏட்டின் உதவியோடும் 1975ஆம் ஆண்டில் இராசரெத்தினம் அவர்களே மறுபிரசுரம் செய்திருந்தார். அதுமட்டுமன்றி இராசரெத்தினம் அவர்கள் தன் மகன் இம்மனுவேல் அவர்களின் அமுதா அச்சகத்தின் ஊடாக தங்கம் வெளியீடாக முதன்முதல் மகாகவி அல்லாமா இக்பாலின் கவிதைகளை தமிழில் "பூவரசம் பூ" என்ற தலைப்பில் இராசரெத்தினம் அவர்கள் மொழி பெயர்த்து வெளியிட்டிருந்தார்.
அதைத்தொடர்ந்து இராசரெத்தினம், அமிர்தகழியான் (செ.குணரெத்தினம்) அவர்களின் "நெஞ்சில் ஒரு முள்" நூலையும், நீலாவாணனின் "வேலாண்மை" என்ற நூலையும் தங்கம் பதிப்பகத்தின் ஊடாக அமுதா அச்சகத்தில் அச்சடித்து வெளியிட்டுள்ளார்.
இராசரெத்தினம் அவர்கள் சுமார் 250 சிறு கதைகளுக்கு மேல் எழுதியுள்ளார். இவரது நாடகங்கள் இலங்கை வானொலியில் மட்டுமன்றி, அகில இந்திய வானொலியின் தென்கிழக்கு ஆசியாவிற்கான ஒலிபரப்பிலும், சிங்கப்பூர் வானொலியிலும் ஒலிபரப்பப்பட்டுள்ளன. இவற்றை விட மேடை நாடகங்களான "முதன்-முழக்கம், முதற் துரோகம், ஹெப்பிற்றிப்பொல" போன்ற சரித்திர நாடகங்களையும் எழுதியுள்ளார். "ஈழ நாயகன்" என்ற புனைப் பெயரில் தொடர்ச்சியாக 22 கட்டுரைகளை ஈழ கேசரி பத்திரிகையில் எழுதியுள்ளார். அவர் பல புனைப் பெயர்களைத் தாங்கி பல கட்டுரைகள் எழுதியுள்ளார்.
தனக்கு மனக்கவலை ஏற்படும் போதெல்லாம் எழுத உட்கார்ந்து விடுவாராம். எத்தனையோ எழுத்தாளர்களும் கவிஞர்களும், கவிஞர்களும் தங்களுக்கு துக்கம் ஏற்படும் போதும் மூட் (mood) வராத போதும் எதை எதையோ எல்லாம் நாடிச் செல்வார்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆனால் இவர் தன் துக்கத்தைப் போக்க எழுத்தை அரவணைத்து ஆலிங்கம் செய்து படைத்தலைச் செய்கின்றார் என்பதை நினைக்கும் போது ஓ! மூதூர் மண் மாதாவே நீ எங்களுக்கோர் வித்தியாசமான எழுத்தாளனைத் தந்திருக்கின்றாய் அம்மா. நீ பெற்ற மைந்தனால் நீ மட்டுமல்ல நாங்களும் பெருமைப்படுகின்றோம். இந்த நாடும் பெருமைப்படுகின்றது....... ஏன்? இந்த இலக்கிய உலகமே பெருமைப்படுகின்றது.

ஈன்ற பொழுதிற் பெருதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்

என்ற இந்த வள்ளுவப் பெருந்தகை இவன் பெருமையை முன்கூட்டியே அறிந்துதான் கூறினானோ?
இலக்கிய வானில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி தன் இச்சையால் சிறகடித்து பறக்கும் இந்த இலக்கியப் புறாவின் தூரநோக்கு மிகவும் கூரியதே. எழுபத்தைந்து அகவைகளைக் கடந்தபோதும் கண்ணாடியின்றி வாசிக்கவும் எழுதவும் செய்து கொண்டிருக்கும் இந்த இலக்கியக் கழுகு இந்த வயதிலும் தன் இளமை நினைவுகளையும், சரித்திரச் சான்றுகளையும் திகதி மாதம் ஆண்டு வாரியாகக் கூறும் ஆற்றல் படைத்த ஞாபகசக்தியுடையது.
நான் வாசித்துப்பெற்றதை விட, இவருடன் பேசிப் பெற்றவையே அதிகம். அனைத்தையும் எழுதி விட முடியமா?
இவர், சிறுகதை எழுத்தாளனாய், குறு நாவல் ஆசிரியனாய், நாவல் படைப்பாளியாய், வானொலி நாடக ஆசிரியனாய், மொழி பெயர்ப்பாளனாய், விமர்சகனாய் வெளியீட்டாளனாய், இத்தனைக்கும் மேலாக இந்த வயதிலும் இலக்கியப் பசி அடங்காத பயங்கர வாசகனாய், பல்துறைகளிலும் பல வடிவத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஓர் இலக்கிய தாரகை.
உலகத் தமிழ் இலக்கியப் பரப்பிலே கிழக்கின் பெருமையை நிலை நாட்டிக் பொண்டிருக்கும், விரல் விட்டு எண்ணக்கூடிய இலக்கிய வாதிகளில் ஒருவர். குறிப்பாக திருகோணமலையின் தலை சிறந்த இலக்கியப் படைப்பாளிகளுள் இன்றைய முன்னோடி. சிறப்பாக மூதூரில் முகிழ்ந்தெடுத்த முத்து. இலக்கியமுத்து.
இத்தனை பெருமைகளுக்கும் புகழ்ச்சிகட்டும் உரித்துடையவர் வேறுயாருமல்ல எங்கள் இராசரத்தினம் அவர்களே.
இந்த இராசரத்தினம் தான் நாம் தேடி அலைந்த இரு எழுத்துக்களுக்கு பெருமை தருகின்றன. வானா.ஆனா. என்று அழைக்கப்படும் வஸ்தியாம் பிள்ளை அந்தோனி இராசரத்தினம்.
இவர் பல்லாண்டுபல்லாண்டு வாழ நாமும் வாழ்த்துவோம். இறைவனையும் அவரை மேலும் சிறப்புடன் வாழவைக்க வேண்டுவோம்.

**நன்றி - இலக்கியப் பூந்துணர்.**
**வ.அ.பவளவிழா மலர் 2000**

# விவேகத்தை முன்னெடுப்போம்.

கவிஞர் திமிலைத்துமிலன்

கவிதை

"மெல்லத் தமிழ் இனிச் சாகும்" என்றேயொரு
வீணன் உரைத்ததனால் - தன்னைக்
கொல்லுதல் போலத் துடிதத்தனன் பாரதி
"கோ"வென ஓலமிட்டான் - அந்தப்
பொல்லாத காலம் இன்று பலித்திடப்
போகுதோ? என்றிதயம் - இன்று
கல்லால் எறிபட்ட கண்ணாடி போலக்
கலங்குதே என்ன செய்வோம்!

நம்மாமல் உருப்பெற்ற நஞ்சன்ன கும்பலே
நாடாள வந்ததனால்,- வில்லின்
அம்பாய் அவர் கையில் வீடணன் ஒட்டுண்ட
அவலமே நேர்த்ததனால் - நம்
வம்சத்தின் தாயென நம்பிய பாரதம்
வல்லரசாவதற்காய் - எங்கள்
பெண்கள் குழந்தைகள் முதியோரை எல்லாமே
வீணிற் பலிகொடுத்தோம்!

தமிழினம் இல்லாத ஈழத்தில் எப்படித்
தமிழே உயிர்த்திருக்கும் - அங்கே
தமிழகம் முற்றுமே ஆங்கில மோகத்தில்
சாப்பறை கொட்டுகிறார் - நம்
அமிழ்தத் தமிழர் புலம் பெயர்ந்தான பின்
அவர் தமிழ் காப்பதுவா? – அங்கு
தவழும் குழந்தைப் புதிய பரம்பரை
தமிழ் அறியாதிருக்கும்!

இந்த நிலையிலே தமிழ் இனி வாழுமா?
இல்லை என்றால் முறைப்பீர் - மாறாய்
பந்தத்தால், "சாகாது" பந்தயம் கட்டலாம்
பாவம்தான் நாங்கள் ஐயா – நம்
சொந்த மொழியே மரணிக்கும் என்று
சொல்லத் துடிதுடிப்போம் - ஆனால்
எந்த மொழியும்,- இறைவன் படைத்தாலும்
இனமின்றி வாழ்வதில்லை!

மொழிகளின் மூலந்தான் இனங்கள் மலர்ந்தன
முழு உண்மை நாம் அறிவோம் - மாறாய்
மொழியின்றி மதத்தாலும் இனமொன்று உள்ளது
மொழியால் இணைவுறுமா? – நாம்
மொழியை உயிர்பிக்க இனத்தினை வாழ்விப்போம்
முழுவதும் உண்மையிது – எங்கள்
மொழியதும் இனத்ததும் இருப்புக்கொரு நாடு
முதலில் படைத்திருந்தோம்!

ஆதிக்குடிகள் நாம், இடையில் புகுந்தவர்
அடக்க அழித்து விட்டார் - இந்தச்
சோதனைக் காளாய்த் துடிக்கிறோம் இன்று
தொடர்கதை யாஇதெல்லாம்? இந்த
வேதனை எந்த விடிவும் தராதன்றோ
விவேகத்தை முன்னெடுப்போம் - அதில்
சாதனை ஒன்று படைப்போம் - அது தமிழ்த்
தாயகம் வென்று தரும்.!

நமது சிறுகதை

எஸ். இராசரத்தினத்தின்

# பயணம்

புது இடம், நுளம்புத் தொல்லை, நீண்ட நேரமாக நித்திரை வரவில்லை. விடியற் காலையிற்தான் தூக்கம் வந்தது. ஆனாலும் வழக்கம் போல ஐந்து மணிக்கே விழித்துக் கொண்டேன்.

என் நடமாட்டத்தைக் கண்ட மகன் சொன்னான். "அப்பு , கச்சான் காத்து ஓரமா வீசுது, ஏழு மணிக்குப் போறது சின்னலோஞ்சு. அதில போகாமப் பத்தரை மணிக்குப் போற பெரியலோஞ்சில போங்க. இப்ப படுங்க அப்பு."

"இல்ல, நான் முதல் லோஞ்சிலேயே, வெய்யிலுக்கு முதற் போக வேணும்."

என்ற சொல்லிக்கொண்டே காலைக் கடன்களை முடித்துப் புறப்பட ஆயத்தமானேன்.

மகன் தடுத்தான், நான் கேட்கவில்லை. அவனும் வேண்டா வெறுப்பாக என்னைத் தன் மோட்டார் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு ஜெற்றியில் விட்டான். அப்போது நேரம் ஆறுமணிதான் என்றாலும் மூதூருக்குப் போகும் பயணிகள் கியூவில் நின்று கொண்டிருந்தார்கள் கச்சான் காற்றச் சற்றுப் பலமாகத்தான் வீசிக் கொண்டிருந்தது. அந்தக் காற்றில் எதிரே பகிங்க வேலைப்பகுதிக் காரியாலயத்தில் நின்ற தென்னை மரங்களின் தலைகள் சாமியாட்டம் ஆடிக் கொண்டிருந்தன.

ஆனாலும் ஆடி ஆவணி மாதங்களில் வீசும் உக்கிரமான கச்சான் காற்றல்ல இன்றைக் காற்ற உக்கிரமாக அடித்தால் துறைமுகத்தின் கரைகோரக் காப்புச் சுவர்களிற் கடலலைகள் மோதி உடையும். அந்த மோதலில் நீர்த்தி வலைகள் பூவாணமாகச் சொரிந்து உட்துறைமுக வீதியைக் குளிப்பாட்டும். அந்த வீதி வழியாக உவர் மலை போக வேண்டியவர்கள், அந்தப் பாதையைத் தவிர்த்துத் தபாற் கந்தோர்ச் சந்தியை அடைந்து மின்சார நிலைய வீதி வழியாகச் செல்வார்கள். உட்துறைமுக வீதி வழியாகச் சென்று உப்பு நீர்க் குளியலைச் சுகிக்க எவருமே விரும்ப வில்லை. ஆனால் காற்று அன்றைக்கு தெருவிற் தண்ணீரைச் சொரியும் அளவிற்குப் பலமா யில்லை! நான் கியூவிற்கு சேர்ந்து கொண்டேன். எனக்கு முன்னால் முப்பது பேர் வரையில் நின்றனர். அறுபது பேர் மட்டும் பிரயாணிக்கக் கூடிய லோஞ்சில், நிச்சயமாக எனக்கு இடம் கிடைத்து விடும் என்ற நம்பிக்கையோடு நான் நின்றேன்.

"மாஸ்டர் துண்டு எடுத்தீங்களா?"எனக்கு முன்னாற் கியூவில் நிற்பவர் கேட்கிறார்.

"என்ன துண்டு?" நான் ஆச்சரியத்தோடு அவரிடம் கேட்கிறேன்.

"மாஸ்டர், இப்ப முன்னைப் போல இல்ல. ஒரு கிழமையா ஜெற்றிக்கு வாற மூதூர் பயணிகிட்ட வாசலில் நிக்கிற பொலிஸ்காரன் ஒரு காட்போட் துண்டைக் கொடுக்கிறான். இன்றைக்கு அதை அஞ்சே முக்கால் மணிக்கே தந்திற்றான்"

இனித் தரமாட்டானா?

"ஓம் மாஸ்டர். நாற்பது துண்டு தந்திற்றான். மீதி இருபதும் பொலிசுக்கும் ஆமிக்கும். அத்தோடு இன்றைக்குப் புதன் கிழமை மூதூரிற் கோடு. நீதவானும் அவர் ஆட்களும் ஆறுபேர் வருவார்கள்" என்று விளக்குகிறார். சக பயணி.

"சரி தான். முதல் லோஞ்சுக்குப் போனாற் போனால் தான்." என்று சலித்துக் கொண்டே துறைமுகத்தின் உட்பக்கமாக வானத்தை நிமிர்ந்து பார்க்கிறேன்.

கிண்ணியாப் பக்கமாகத் திட்டுத் திட்டாய்ச் சுருண்ட கரு மேகங்கள் அந்த மேகச் சுருணைகளைக் "கொத்துவானம்" என்பார்கள் ஊரில். அந்தக் கொத்து வானத்தோடு வானம் மப்பும் மந்தாரமாக இருந்தது.

இந்தக் கொத்து வானமும் மந்தாரமும் சோழகமும் வீசப் போவதற்கான அற்குறிகள் என்பது எனக்கத் தெரியும்.

நான் கடலோடியவர்களின் சந்ததி. அந்தப் பலத்த காற்றோடு மழைத்துளிகள் சொட்டுகையில் "கடுங்காத்துக்கு வாயூறுது" என்பார்கள் ஊரவர்கள். அறுபது ஆண்டுகளுக்கு முன்னே, திருகோணமலைக்கும் மூதூருக்கும் இடையில் எம்மவர் வத்தைகள் தான், பயணச் சாதனங்களாக இருந்தன. சோழகக் காற்றுக் காலத்தில் மூதூர் ஜெற்றியிலிருந்தே வத்தைகள் பாயை விரித்து பின் அலரியத்தில் 'கோசுக் கயிற்றை' இழுத்துக் கட்டிப் பக்கவாட்டில் "கோசுக் கம்பை "யும் ஊன்றித் தள்ளி வைப்பதோடு, " கிலாசு "களின்வேலை முடிந்துவிடும்.அதன் பின் ஒரே ஓட்டமாக ஓடி வில்லுப் பாலத்திற்தான். வத்தை தரிக்கும்.

பாயின் அடிப்பக்கமாக இருக்கும் 'தாமான் கயிற்றை' இழுத்து அணைத்துக் கோசிலே - அதாவது காற்றை எதிர்த்து ஓடவும் சுக்கானிக்கு பக்கத்தில் தாமான் கயிற்றைப் பிடித்துக் கொண்டு இருப்பவர், வத்தையில் வைஸ்கப்ரின். சுக்கானி த்தான் கப்ரின். தம்பலகாமக் குடாவி லிருந்து சீறிவரும் சோழகம், எந்தத் தங்கு தடங்கலுமின்றி வத்தைப் பாயை நிறைத்து., அதனை தள்ளிக் கொண்டு "கோசிலே" ஓடுகையில் முன்னியத்திற் கடலலைகள் மோதி ஆவெனத் திறந்தே கிடக்கும் வத்தைக்குள் இருக்கும் பயணிகளை நனைக்கும். ஆனால் வத்தை அசுவ கமனத்திற் சென்று கொண்டே யிருக்கும்.

ஓடும் வத்தை பெரிய கங்கை மலை என்ற பாதாள மலையை இடப்புறமாகச் சுற்றி வளைந்து. அத்தீவைக் கடந்த பின்னர் தான் தாமான் கயிற்றை இளக்குவார். வத்தை வட்டப் பாயிற் காற்றை வாங்கிக் கொண்டு காற்றோடு போகும். பின் தள்ளும் காற்று. வத்தையில் மட்டுமா? இரண்டாவது மகாயுத்த காலத்தில். மூதூரி லிருந்து சிறிய மீன்பிடித் தோணியிலும் கூடத் திருகோணமலைக்குப் பயணித்திருக்கிறேன். கச்சான் காற்று பலமாக அடிக்கிறதே என்பதற்காகவோ, அதை விட மோசமாகக் கடலைக் கிண்டி எழுப்பும்வாடைக் காற்றுக்குப் பயந்தோ எந்தக் காலத்திலும் நான் என் பயணத்தை நிறுத்தியதில்லை. ஆனால் இப்போது சற்றுத்தயக்கமாக இருக்கிறது.

கொத்து வானமும் மந்தாரமுமாக இருக்கும் சோழகக் காற்றுக் காலத்தில் பாயை ஏற்றிக் கட்டிய "ஆஞ்சான் கயிற்றினைப் "பிடித்துக் கொண்டு வத்தையின் தளத்தில் இரண்டு "திலாசு" கள் நிற்பர். கடலையே அவர் கண்கள் அவதானித்துக் கொண்டிருக்கும். திடீரென அவர்கள் உரத்தக் கத்துவார்கள் " வாறான காத்"

'ஆறிவா தாயே" என்ற வத்தைக் குள்ளிருப்பவர்கள் குரல் கொடுப்பார்கள். தாமான் கயிற்றில் இருப்பவர் கயிற்றை இளக்கிக் காற்றை வழியவிடுவார். வத்தை ஓடிக் கொண்டேயிருக்கும்.

ஆனால் லோஞ்சிற் கண்ணாடிக் கூட்டுக்குள் இருந்து கொண்டு சுக்கானி வளையத்தைச் சுற்றுவார். அவ்வளவு தான், மேற் தட்டிலுள்ள "டெக்கான்" களுக்கு லோஞ்சு கரையை அடைந்ததும் கயிற எறியத்தான் தெரியும் அதைத் தவிர காற்றையோ கடலையோ கணிக்க எவருக்குமே தெரியாது என்பது தான் என் தயக்கத்தின் காரணமா?

கச்சான் பலமாகத்தான் வீசிக்கொண்டிருக் கிறது. துறைமுக வாசலில் நிற்கும் பொலிஸ்காரன் துண்டுகளை வாங்கிக் கொண்டு உள்ளே விடகிறான். அப்பொது தான்.வந்த பொலிஸ் காரர்களும், அரசாங்க உத்தியோகத்தர்கள் சிலரும் துண்டு இல்லாமலே உள்ளே செல்கிறார்கள். எல்லாருமாக ஐம்பது பேருக்குமேற் போய் விட்டார்கள். எனக்க இடம் கிடையாதா? நான் பத்தரை மணி வரையும் காத்திருக்க வேண்டுமா? எனக்குத் திருகோணமலைப் பட்டினத்திற் தரிப்பதென்பது யமவாதனை! அப்பட்டினத் தின் "கந்தகச் சூடு" என்றைக்குமே எனக்குப் பிடிப்பதில்லை. தொண்ணூறாம் ஆண்டு ஊரைவிட்டுப் புலம்பெயர்ந்து அகதியாகத் திருகோணமலைப் பட்டினத்தில் வாழ்ந்த போதும் "எப்போ ஊருக்குப் போவோம்" என்ற ஆதங்கத்துடன்தான் வாழ்ந்து கொண்டிருந்தேன். இப்போதும் விரைவாக ஊருக்குப் போகவே விரும்புகின்றேன். ஏற்கனவே தகித்த "காண்டாவனத்தால்" மேலெல்லாம் வியர்க்குரு, பொழுது ஏற ஏற உடலெல்லாம் அரிப்பெடுத்து எரிந்து ஹிம்சைப்படுத்தும். காற்றோ, கடலோ இப்போதே போய்விட வேண்டும். மாவலித் தேவியின் சீதளச் சூல்களைச் சுமந்து வரும் என்னூர்க் காற்றில் வேப்பமர நிழலில் அமர்ந்திருப்பதுதான் எத்தனை சுகம்!

நான் கியூவிற்தான் இன்னமும் நிற்கிறேன். நீதவானும் அவர் பரிவாரங்களும் இன்னமும் வரவில்லை. நான் கியூவிற்தான் நிற்கிறேன்.

எப்போதோ அறிமுகமான ஒரு சிங்கள பொலிஸ்காரன் சைகை காட்டி என்னை உள்ளே அழைக்கிறான். என் விருத்தாப்பிய நிலைகண்டு பரிதாபப் பட்டானோ என்னவோ! நான் உள்ளே போகிறேன். அப்பாடா! எனக்கு அனுமதி கிடைத்து விட்டது.

உள்ளே சென்ற நான் துறைமுக மேடையை நோக்கி நடக்கிறேன். என் கைப்பை பரிசோதிக்கப்படுகிறது. அந்தச் சடங்கு முடிந்ததும் பெயர் பதிய வேண்டும். இந்தப் பெயர் பதியும் சடங்கு இப்போதெல்லாம் மிகக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப்படுகின்றது. மூன்றாண்டு களுக்கு முன்னால் திருகோணமலை யிலிருந்து மூதூர் வந்த லோஞ்சு ஒன்று கடலில் மூழ்கி, வங்காளக் கடல் பலரைப் பலி கொண்டது. அதன் பின் இந்தப் பெயர் பதிவு கட்டாயமானது.

பொலிஸ்காரி ஒருத்தி என் அடையாள அட்டையை வாங்கிப் பார்த்து பெயர், விலாசம், அடையாள அட்டை இலக்கம் ஆகியவற்றைப் பெரிய புத்தகத்தில் எழுதிக் கொண்டதும் நான் மேலே நடந்து, துறைமுக மேடையிலமைந்த சீமெந்து பெஞ்சில் அமர்ந்து கொள்கிறேன். பலர் அமர்ந்திருக்கிறார்கள். இப்போதே லோஞ்சில் ஏறி அமர்ந்து கொண்டால் "அலைகளின் தாலாட்டில் நித்திரை வராது. சத்திதான் வரும்" என்ற பயம் எல்லோருக்கும்.

காற்று முன்னை விட பலமாக வீசுகிறது. அறுபர் பேருக்கு மேல் விடாமல் இருந்த பொலிஸ்காரன், இப்போது எல்லோரையுமே விடுகிறான். "இந்தச் சனம் எல்லாம் கடலிலே போய் தொலையட்டும்". என அவன் எண்ணினானோ. அளவுக்கு மேற் சனம் ஏறிய லோஞ்சில் நான் போவதா போகாமல் விடுவதா?

கைப்பையில் பேராசிரியர் அருணாச்சலம் எழுதிய "இலங்கைத் தமிழியல் ஆய்வு முயற்சிகள்" என்ற நூல் இருக்கிறது. அதனைப் படித்துக் கொண்டிருந்து விட்டுப் பத்தரை மணி லோஞ்சுக்குப் போகலாமா? கிண்ணியாவிற்கு மேலே தோன்றும் கொத்துவானமும் மூசாப்பும் என்னைப் பயமுறுத்துகின்றன.

என்னாற் தீர்மானத்திற்கு வர முடிய வில்லை. அருகே உள்ள பொலிஸ் கன்ரீனுக்குச் செல்கிறேன். பிளேன்ரீ இல்லையாம் அங்கே. கடும் காற்று காரணமாக பொயிலரைப் பற்றவைக்க முடியவில்லையாம்.

நான் பிறிஸ்ரல் ஒன்று வாங்கிப் பற்றவைத்துக் கொண்டேன். கடந்த சில மாதங்களாகப் புகைப்பதை நிறுத்தி யிருந்தேன். தொய்வு நோய்க்காரன் புகைக்கவே கூடாதாம். ஆனால் இப்போது புகைக்கிறேன். என் மனக் குழப்பந்தான் காரணமா?

நான் கன்ரினை விட்டு வெளியே வருகி றேன். நீதவான் வந்து விட்டார். காத்திருந்தவர்கள் எல்லோரும் சென்று லோஞ்சில் ஏறுகிறார்கள். நான் தயங்கிக் கொண்டு நிற்கிறேன். "வாருங்கள் சேர்" உள்ளேயிருந்த என் மாணவி என்னை அழைக்கிறாள். அவள் இப்போது ஆசிரிய ஆலோசகர். ஊரை விட்டு புலம்பெயர்ந்து தற்போது திருகோணமலைப் பட்டினத்தில் வாழ்கிறாள். தன் உத்தியோகத்தின் நிமித்தம் தினமும் லோஞ்சிற் பயணிக் கிறாள். "எத்தனையோ பேர் போகிறார்கள். நமக்கு மட்டுமா சாவு வரப் போகிறது?" என்ற மிதப்பான எண்ணத் தோடு நானும் லோஞ்சில் ஏறுகிறேன். ஆசனங்கள் எல்லாமே நிரம்பியிருந்தன. நீதவானுக்கு மட்டும் சுக்கானுக்குப் பக்கத்தில் ஓர் ஆசனம் காலியாக இருக்கிறது!

நான் ஏறிக் கொண்ட போது டெக்கான் சொன்னான். "சேர் குத்தலுக்குள்ள சீற் இருக்கு. அங்கு போய் இருங்க. உங்களால இங்க நிக்க முடியுமா? காத்து பெலமா இருக்கு. தண்ணியடிக்கும். சீற்றில் போய் இருங்க சேர்" டெக்கான் என் முன்னாள் மாணவன். ஊரவன்.

நான் லோஞ்சில் முன்னணியத்தில் இருக்கும் "கபின்" என்ற குத்தலுக்குள் இருந்து என்றைக்குமே பயணித்தது கிடையாது. அங்கே காற்று வராது. ஒரே புழுக்கமும் இருளுமாக இருக்கும்.

ஆனால் இன்று வேறு வழியின்றி குத்தலுக்குள் சென்று இருக்கையில் அமர்ந்து கொள்கிறேன். அங்கேயும் பலர் கைக்குழந்தைக்காரிகள்.... என்னைப் போல வயோதிபர்கள்.

என் மாணவியும் என் பக்கலிற்தான் இருக்கிறாள். நாளாந்தம் பிரயாணிப்பதால் அவளுக்குப் பயம் தெளிந்துவிட்டதா? அப்படியிராது. அவள் அத்திலாந்திக் சமுத்திரத்தையே பாய்க் கப்பலிற் கடந்து சென்ற வல்வெட்டித்துறைக் கடலோடிகளின் பரம்பரையினள். அவள் பயமின்மைக்கு அதுதான் காரணம் போலும்!.

துறைமுகப் பாலத்தோடு கட்டப்பட்டிருந்த லோஞ்ச் கடலலைகளால் ஏற்றப்பட்டு அங்குமிங்கும் அல்லாடிக் கொண்டிருந்தது. அந்த ஆட்டமே பயணிகளுக்கு தலைச்சுற்றையும் மயக்கத்தையும் கொடுத்துக் கொண்டிருந்தது. கைக்குழந்தையொன்று வீறிட்டு அழுகின்றது. அந்த அல்லோலகல்லோலங்களுக்கிடையே லோஞ்சின் கரைக்கட்டு அவிழ்க்கப்பட்டு லோஞ்ச் முன்னேறி ஓடிக் கொண்டிருக் கிறது.

சோழகக் காற்றுக்கு ஜெற்றியடிக் கரையோரந்தான் அலைகள் மூர்க்கமாக அடிக்கும். உள்ளே போகப்போகத் துறைமுகத்தின் எல்லைகளாக உயர்ந்து நிற்கும். மலைகளிற் காற்றுத் தகைந்து அலைகளை எழுப்பத் திராணி அற்றதாகத்தான் இருக்குமென்ற விவகாரம் எனக்குத் தெரியும். லோஞ்ச் போகப்போக ஆட்டமும் குறைந்து கொண்டே வந்தது. வெளியே காற்று வீசினாலும், மந்தாரமாக இருந்தாலும் குத்தலுக்குள்ளே ஒரே புழுக்கம, வெயர்வை லோஞ்சின் கண்ணாடி சாளரங்களும் குத்தலுக்கு மேலே உள்ள பலகையும் கூட மூடிவிடப்பட்டிருந்தன. இல்லாவிட்டால் அலையடித்து எல்லாவற்றையும் நனைத்து விடுமாம். கைக்குழந்தையின் அலறலையும் பொருட்படுத்தாது லோஞ்ச் ஓடிக் கொண்டிருந்தது.

உயர்ந்து நிற்கும் "பிறீமா" ஆலையைத் தாண்டி, சீனக்குடாவும் கழிந்தாற்தான் காற்று அலைக்கழிக்கும். அதுவரை மலை ஒதுக்குகளில் கடல் குளம் போல அமைதியாகத்தான் இருக்கும்.

சமாதானப் பேச்சுக்கள் முறிவுபட்டுத் துறைமுகத்தினுள்ளே நின்ற இரண்டு கப்பல்கள் ஆழ்த்தப்பட்டு மீண்டும் மூன்றாம்கட்ட ஈழப் போர் தொடங்கிய போதுதான் துறைமுகத்துக்கு உள்ளேயும் வெளியேயும் வரும் இராஜபாதை மூடப்பட்டு பிறீமா ஆலையருகாக வரும் புதிய சுற்றுப்பாதை தொடங்கியது. இரண்டாவது உலக மகாயுத்தத்தின்போது கூடத் துறைமுகத்தின் இராஜவாசல் மூடப்பபட்டதில்லை. வேப்பங்குடாவையும் தாண்டியாயிற்று. லோஞ்ச் கரிமலையூற்று பக்கவாட்டில் மலை என்ற பாதாள மலைத்தீவை இடப் பக்கமாக வளையும் வாக்கிற் போய்க் கொண்டிருந்தது.

காற்றுச் சற்றே தணிந்து போலத் தோன்றிற்று. வெறும் பிரமைதான். காற்று

# சிறுவர் விருந்து

**தயாரிப்பு – ருக்ஷன்**

– இராமாயணத் தொடர் –



# சக்கரவர்த்தி திருமகன்

**மாஸ்டர் சிவலிங்கம்**

## அத்தியாயம் 19

ஆச்சிரமத்திற்குள் புகுந்து சீதையைப் பிடித்து பறக்கும் தேரில் கொண்டு செல்ல வேண்டும் என எண்ணிக் கொண்டு ஆச்சிரமத்தை நோக்கிப் பூனைபோல பதுங்கிப் பதுங்கிச் சென்றான். அப்படிச் சென்றவன் இலட்சுமணன் கீறிய மந்திர கோட்டிலே மிதித்துவிட்டான். உடனே 'குபீர்' என்று அவ்விடத்திலே தீப்பற்றி எரிந்தது. அதிர்ச்சியடைந்த இராவணன் பின்வாங்கி முன்னர் தனித்திருந்த மரக்கட்டையிலே அமர்ந்து கொண்டான். ஆச்சிரமத்திற்குள்ளிருந்து பழக்கூடையுடன் வந்த சீதை மந்திர கோட்டை கடந்து சந்நியாசி வேடத்திலிருந்த இராவணனுக்குப் பக்கத்திலே வந்தாள் சந்நியாசி வேடத்திலிருந்த இராவணன் திடீரெனத் தனது சுயரூபத்துக்கு மாறினான் அரக்க வேந்தனின் உருவைக் கண்டதும் அதிர்ச்சியடைந்தாள் சீதை.

"பேரழகு படைத்த பெண்ணே நான் தான் இலங்கை வேந்தன் இராவணன் நாட்டை இழந்து காட்டில் அலையும் இராமனை ஒதுக்கிவிட்டு என்னோடு வந்துவிடு உன்னை எனது பட்டத்துராணி ஆக்கிவிடுகிறேன்" என்றான் இராவணன் "அடப்பாவி ஏன் இப்படி அற்பத்தனமாகப் பேசுகிறாய்? உன்னுடைய அழிவுக்கு நீ வழி தேடுகிறாயா? அற்பனே எனது கணவர் இராமச்சந்திரமூர்த்தியும் அவர் தம்பி இலட்சுமணனும் வருவதற்கிடையில் இங்கிருந்து ஓடித்தப்பிவிடு இல்லாவிட்டால் இராம பாணத்திற்கு நீ இரையாகி விடுவாய்"என்று ஆத்திரத்துடன் சத்தமிட்டாள் சீதை.

கோபமடைந்த இராவணன் மின்னல் வேகத்தில் பாய்ந்து சீதையைத் தூக்கித் தனது புஸ்பக விமானத்திலே ஏற்றிக் கொண்டு இலங்கையை நோக்கி பறந்து சென்றான். சீதை கதறி அழுதபடியிருந்தாள். அதே நேரத்தில் கண்ணீர் சிந்தியபடி தன்னை நோக்கி ஓடிவந்த இலட்சுமணனைக் கண்டதும் அதிர்ச்சியடைந்தான் இராமன் "தம்பி இலட்சுமணா சீதையைத் தனியே விட்டுவிட்டு இங்கு ஏன் அழுதபடி ஓடி வருகிறாய்? என்று படபடப்புடன் கேட்டான் இராமன்.

"அண்ணா தங்களுக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டுள்ளதென்றும் உடனே உங்களிடம் ஓடும் படியும் சீதா பிராட்டி கூறினார். அண்ணனுக்கு எவ்வித தீங்கும் ஏற்படாது உங்களுக்கு காவலாக நிக்கும்படி அண்ணன் கூறிச் சென்றுள்ளார் என்று கூறினேன். அடப்பாவி இராமன் இறந்ததும் என்னை திருமணம் செய்து கொள்ளலாம் என்று எண்ணித்தான் நீ வனவாசம்செய்ய வந்தாயா? என்று பேசக்கூடாத வார்த்தைகளைப் பேசினார். ஆகவே தான் இங்கு நான் ஓடி வந்தேன்" என்று அழுதபடி விளக்கிக் கூறினான் இலட்சுமணன்.

"ஐயோ பயங்கர அரக்கர்கள் உள்ள காட்டில் சீதையைத் தனியே விட்டுவிட்டு வந்துவிட்டாயே தம்பி..." என்று அலறியபடி பர்ணசாலையை நோக்கி ஓடினான் இராமன். அவனைப் பின்பற்றி விரைந்து சென்றான் இலட்சுமணன் பர்ணசாலையில் சீதை காணப்படாததால் இராமனும் இலட்சுமணனும் அதிர்சியடைந்தனர். அங்குமிங்கும் ஓடியோடித் தேடிப் பார்த்தனர். இப்படி அவர்கள் தேடிக் கொண்டிருந்தபோது....! இரத்த வெள்ளத்திலே குற்றுயிராகக் கிடந்த கழுகரசன் சடாயுவைக் கண்டனர். அருகில் வரும்படி சைகை மூலம் அழைத்தது சடாயு. இருவரும் அதன் பக்கத்திலே சென்றனர். "இராமா..! உனது தந்தை தசரதச் சக்கரவர்த்தியை நான் மிக நன்றாக அறிந்துள்ளேன். உனது வரவையே நான் ஆவலோடு எதிர்பாத்திருந்தேன்...உனது மனைவி சீதையை இலங்கை வேந்தன் இராவணன் தனது பறக்கும் தேரிலே கொண்டு செல்கிறான். என்னால் முடிந்தவரை இராவணனை எதிர்த்துப் போரிட்டுச் சீதையை மீட்கப் பார்த்தேன்... அந்த முரடன் எனது சிறகை வெட்டி விட்டுத் தப்பிச் சென்றுவிட்டான். இராமா...! இராவணனுடன் போரிட்டு அவனை வென்று உனது மனைவியை மீட்டெடுப்பாயாக...!" என்று தணிந்த குரலிலே கூறிவிட்டு உயிர் துறந்தது கழுகரசன் சடாயு.

சடாயுவுக்குச் செய்யவேண்டிய இறுதிக் கிரியைகளைச் செய்துவிட்டு, சீதையைத் தேடிப் புறப்பட்டனர் இராமனும் தம்பியும். இதே வேளையில்...! தனது பறக்கும் தேரிலே சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் இலங்கையை அடைந்தான். அசோக வனத்திலே அரக்கிகள் மத்தியிலே சீதையைச் சிறை வைத்தான். "உனக்கு சிறிது காலம் அவகாசம் தருகிறேன்... நன்றாகச் சிந்தனை செய்... என்று நீ கணவனாக ஏற்க விரும்புகிறாயோ அன்றுதான் உனக்கு நல்லகாலம் பிறக்கும். வீண் பிடிவாதம் பிடித்து என்னை நீ வெறுத்தால் நீ உயிரோடு இருக்கமாட்டாய்!" என்று எச்சரிக்கை செய்துவிட்டுச் சென்றான் இலங்கை வேந்தன்.

இராமனும் இலட்சுமணனும் சீதையைத் தேடி அலைந்தபடி கிரௌஞ்சாரணியம்என்ற வனத்தை அடைந்தனர்.



இவர்களைப் பல முனிவர்கள் சந்தித்து உரையாடினர். ரிஷ்யமூகம் பர்வதத்துக்குச் சென்று சுக்கிரீவனைச் சந்தித்தால் அவன் உதவியுடன் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கலாம் என்று அந்த முனிவர்கள் இராமனிடம் தெரிவித்தனர்.

கிஷ்கிந்தையின் அரசனான வானரவீரன் வாலியின் தம்பிதான் சுக்கிரீவன் என்றும் அவர்கள் இருவருக்குமிடையில் பகைமை ஏற்பட்டதால் பயமடைந்த சுக்கிரீவன் உயிர் நண்பன் அனுமானுடன் ரிஷ்யமூகத்தில் மறைந்து வாழ்வதாகவும் முனிவர்கள் தெரிவித்தனர். இராமனையும் இலட்சுமணனையும் கண்ட சுக்கிரீவன் அச்சம் கொண்டான். வாலியின் ஒற்றர்கள் யாரோ வருகிறார்கள் என்று பயந்தான். தனது நண்பன் அனுமானை அழைத்து அவர்கள் யார் என்ற அறிந்துவரும்படி கூறினான் சுக்ரீவன் வெளியே வந்து சுக்கிரீவனை துரத்திச் சென்றான். **தொடரும்.....**

---

வரும் எல்லா வழிகளையுமே அடைத்த பின்னர் லோஞ்சுக்குள்ளே காற்றின்

(31ம் பக்கம் பார்க்க.....)

ஸ்பரிஸத்தை உணர முடியுமா? அதைக் கண்ணாற் காணத்தான் முடியுமா?

பாதாள மலையையும் தாண்டியாகிவிட்டது. என் இருக்கையின் முதுகுப் புறமாகப் பத்து மைல் தொலைவுக்கு ஓவென்று தம்பலாகாமக் குடாக்கடலூடாகக் கச்சான் காற்று எந்த தங்கு தடையும் இல்லாமல் "கிட்டிப் புள்ளும் பம்பரமும் கிறுகியடிக்கப் பாலாறு..... பாலாறு" என்று பாடிக் கொண்டே ஓடிவரும் கிராமத்து இளைஞன் போலச் சுயேச்சையாய்க் கிண்ணரம் பாடிக் கொண்டேவரும், அந்தக் காற்றுத்தான் லோஞ்சை சிப்பிலியாட்டம் ஆடச் செய்யும் என்பது என் அனுபவம். ஆனாலும் லோஞ்சில் ஏறினால் புத்தகத்தை விரித்துப் படிக்கும் என்னை எந்தக் காற்றும் பயமுறுத்தியதில்லை. ஆனால் இன்று நான் புத்தகத்தைக் கையில் எடுக்கவேயில்லை. என் கைப்பைக்குள் அருணாசலத்தார் அடங்கிக் கிடக்கிறார். பாதாளமலை என்ற சின்னஞ்சிறு கற்பார்த் தீவையும் அதன் அயலிலுள்ள கடலையும் பற்றிப் பல்வேறு கதைகள். வெள்ளைக்காரன் எத்தனையோ சங்கிலிக் கயிறுகள் விட்டும், அவனால் அக்கடலின் ஆழத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லையாம் என்று ஊரவர்கள் சொல்லுவார்கள். "ச இதைல்லாம் பொய். உலகின் மிக ஆழமான கடல் பசுபிக் சமுத்திரத்தில் உள்ள மரியானாப் பள்ளந்தான். அதன் ஆழம் முப்பத்திரெண்டாயிரம் அடி எனக்கண்டவாக்களால் இந்தக் கடலின் ஆழத்தைக் காணாதிருக்க முடியுமா?" என்று ஊரவர்களை எதிர்த்துக் கதைத்திருக்கிறேன். ஆனாலும் இன்றைக்கும் ஒரு விடயம் எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னே கச்சான் காற்றே அடிக்காத தை மாதப் பின்பனிக் காலத்தில் திருகோணமலையிலிருந்து மூதூருக்கு வந்த லோஞ்ச் ஒன்று பாதாள மலைக்கருகில் கடலில் ஆழ்ந்துவிட்டது. ஐம்பது பேருக்கு மேல் மரணித்தனர். கொட்டியாபுரப்பற்று முழுவதுமே கதறியழுதது. லோஞ்ச் ஆழ்ந்த பின்னர் மரணித்தவர்களின் சடலங்கள் கடலில் எங்காவது மிதக்கும் அல்லது கரையொதுங்கும் என்று இரண்டு வாரங்களாக காவலிருந்தோம். ஆனால் எந்தச் சடலமும் மிதக்கவுமில்லை, கரையொதுங்கவுமில்லை. மரணித்தவர்கள் எல்லோரையுமே பாதாளமலைக்கடல் தன் ஜலசமாதியில் அடக்கிக் கொண்டது. அது எனக்கு இன்னமும் ஆச்சரியமாகவே இருக்கிறது. அந்தக் கடல் ஏதோ விசித்திரமான விளங்க முடியாததுமான சக்தியைக் கொண்டிருக்கிறது என்பதை நம்பத்தான் வேண்டியுள்ளது.

பாதாள மலைக்குச் சற்றே தெற்காக கிண்ணியாக் குடாவைப் பார்த்தவாறு சின்னங்கை மலை (சின்னக் கங்கை மலை) என்ற இன்னொரு குன்றுத் தீவு. இரண்டு கற்பாரைகளுக்குமிடையே லோஞ்ச் ஓடிக் கொண்டிருக்கையில் "சலார் சலார்" என்று லோஞ்சில் அலைகள் மோதின. மேலே கொட்டிய தண்ணீர் லோஞ்சுக் குள்ளேயும் ஒழுகியது. எங்கும் தண்ணீர். இதற்குள் அலை ஒன்று நுரை தள்ளி விரிந்து லோஞ்சை அலக்காகத் தூக்கி இன்னோர் அலையில் மோது விக்கிறது. அந்த "மடக்கடியில்" "நாயகனே! சுபானல்லாஹ்" என்ற தீனக்குரல்கள். முருகா என்ற பாசமும் பயமும் கலந்த அழைப்புக்கள். அலையில் ஏறிவிழுந்த லோஞ்சின் அடுத்த அதிர்வில் சரிந்து விழவிருந்த நான் பக்கத்திலிருந்த இரும்புக் கம்பியை பிடித்துக் கொண்டு "மாதாவே" என ஓலமிட்டேன். மரணபயம் என்னைக் கவ்விக் கொண்டது. என்னுதடுகள் என்னை அறியாமலே

அலைகடல் ஒளிர் மீனே – செல்வ
ஆண்டவர் தாயாரே
நிலைபெயராக் கன்னி – மோட்ச
நெறிக் கதவே வாழி!

என்ற தேவதாயின் தோத்திரப் பாடலை முணுமுணுக்கின்றன.

ஐந்தாண்டுகளுக்கு முன்னே என் சின்னப் பேரனுக்காக ஒரு சிறங்கைச் சோளன் விதைகளை வீட்டுத் தோட்டத்திலே நட்டிருந்தேன். அவை வளர்ந்து பூத்து மீசை தள்ளிக் குலை ஈனுவதை அவதானித்துக் கொண்டே அவன் என்னிடம் ஆயிரம் வினாக்கள் கேட்டான்.

"அவனுக்கு விடையிறுக்க முடியாமையால் நானே அவனிடம் கேள்வி கேட்டேன்.

"நான் செத்துப் போனா என்னடா செய்வா?"

"உங்களைச் சோளனுக்கு நாட்டிப் போடுவன்" என்றான் அவன். "புதைத்தல்" என்ற சொல்லை அறியாத நான்கு வயது அவனுக்கு.

அந்த நினைவு வந்ததும் "இந்தப் பாதாள மலையில் லோஞ்சுக்கு ஏதும் நடந்தால் வெளியேதானும் போகமுடியாத நிலையில் இந்தக் குத்தலுக்குள்ளேயே அடைபட்டு "ஜலசமாதி" அடைந்து விடுவேனோ? என் உறவினர்கள் என் பிரேதத்தைக்கூட காணமாட்டார்களோ?

நினைவுகளின் அழுத்தத்தில் என் உதடுகள் தேவதாயின் பாடலைப் பாடிக் கொண்டேயிருந்தன.

அலைகளில் ஏறியும் விழுந்தும் லோஞ்ச் ஒருபக்கமாக் சரிந்து ஓடிக் கொண்டே இருந்தது. சரிந்த பக்கம் நின்றவர்கள் இந்தப் பக்கம் வந்து கொண்டிருந்தார்கள். அடுத்த பக்கம் சரியும்போல இருந்தது. சுக்கானி கத்தினான். "எல்லோரும் ஒரு பக்கமா வந்தா எப்படி லோஞ்ச் ஓட்றது?" லோஞ்சுக்குள்ளே சங்கீதக் கதிரை ஓட்டம். இந்த அக்கடிக்குள் லோஞ்ச் சின்னங்கை மலையைத் தாண்டிவிட்டது.

"இனிமேற் புறந்தள்ளிய காற்றுத்தான் இனிப் பயமில்ல மாஸ்ரர்" என்றார் அருகிலிருந்த அக்கரைச்சேனை மீனவ நண்பர் மன்சூர்.

நான் கண்ணாடி யன்னலூடாக வடக்கே பார்த்தேன்.

சம்பூர்க் குடாவிற்குள் கிடப்பது போலத் தோன்றும் நெய்மலைத்தீவு நகர்ந்து நகர்ந்து கெவுளி முனை வெளிச்ச வீட்டையும் மறைத்துக் குடாவுக்கு வெளியே கடலுக்குள் வந்துவிட்டது. தீவு வெளிப்பட்டால் மூதூர் வந்துவிட்டது என்று அர்த்தம்.

லோஞ்சுக்குள் அழுகையும் பற்கடிப்பும் நீங்கி நிம்மதிப் பெருமூச்சு விட்டனர் பயணிகள். இன்னமும் பத்து நிமிட பயணம்தான்.

இருந்தாற்போலிருந்து மூதூரிற் "கிரனைட்" முழங்கும். அதைத் தொடர்ந்து ஏ.கே. வேட்டுக்கள் சரமாரியாகக் கேட்கும். பின்னாற் செல்களின் உறுமல்கள். என்ன நடக்கிறது என்று எவருக்குமே தெரியாது. வீட்டுக்குள் முடங்கிக் கொண்டு தத்தம் இஷ்டதெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பார்கள் மக்கள். சில மணித்துளிகளில் எல்லாம் "கிளீயராகி" விடும். வெடி கேட்கும் நேரத்தில் பயந்து தெய்வங்களை எல்லாம் வீட்டுக்குள்ளே அழைத்தவர்கள், எல்லாவற்றையுமே மறந்து விடுவார்கள். லோஞ்சுக்குள்ளும் இதுதான் நடந்ததா?

லோஞ்ச் மூதூர் ஜெற்றியை அடைந்து விட்டுது. பயணிகள் அவசர அவசரமாக இறங்கினார்கள். நான் கடைசியாகத்தான் இறங்கினேன். பாலத்தைத் தாண்டி மூதூர் மண்ணிற் காலடி பட்டதும் குனிந்து அம்மண்மைத் தொட்டு முத்தமிட்டேன். இந்த மண்ணிற்தான் என் சடலம் அடங்க வேண்டும் என்ற என் ஆசையின் வெளிப்பாடா? அதற்கு இன்னமும் எவ்வளவு காலம் பயணிக்க வேண்டும்?

**நன்றி - இலக்கியப் பூந்துணர்.**
**வ.அ.பவளவிழா மலர் 2000**




# Toronto

## வாழ் தமிழ் மக்களுக்கு
## மெலனி டேவிட்
## தனது சட்ட நிறுவனத்தின் ஊழியர்களுடன் இணைந்து மனம் நிறைந்த நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறார்.




"உங்கள் அனைவரின் அன்பும், ஆதரவும் எமது சட்ட நிறுவனத்தை வளர்த்து உயர்த்தியது மட்டுமல்ல, என்னை 2012 சிறந்த குடிவரவாளரில் ஒருவராக தேர்ந்து எடுக்கவும் உதவியுள்ளது."

"தமிழ் மக்களின் அன்புக்கும் ஆதரவுக்கும் தலை வணங்கி நன்றி கூறுகின்றோம்."

**மெலனி டேவிட்**
சட்ட ஊழியர்கள்.

**MDLAW.CA**

LANDLINE **416.430.0044** | HOTLINE **416.271.5992**

885 Progress avenue
Suite 110
Scarborough, Ontario
M1H 3G3
T : 416.430.0044
F : 416.430.0049

5200 Dixie Road
Suite 114
Mississauga, Ontario
L4W IE4
T : 905.232.3004

# கடவுள்தான் தஞ்சம் காலம் பழிவாங்கும்.

"இஞ்சே உனக்கு ஒரு விஷயம் தெரியுமே?" என்று பெரிய மர்மத்தை கலக்கப் போகிற மாதிரி மார்க்கண்டப்பு மகளை கேட்டார். "என்ன பெரியபுள்ளிகள் ஆருக்கும் ஏதாவது நடந்து விட்டதோ?" என்றார் நல்லம்மா. "இல்லை. நமசிவாயத் தாரின் மகள் ராணி முல்லைத்தீவில் இருந்து காட்டுப் பாதைக்கால புருஷனுடன் தப்பி வந்திட்டாவாம். நமச்சிவாயத்தார் உனக்கு சொல்லச் சொன்னவர்." என்று திருவாய்மலர்ந்தருளினார். "இஞ்ச இதை எனக்கு சொன்னமாதிரி வேறொருவருக்கும் சொல்லிப் போடாதனை அப்பு. அந்தாள் சொல்லச் சொன்னதை எதோ நீ கண்டு பிடித்த மாதிரி சொன்ன நீ என்ன?" என்று சொல்லி சிரித்தாள். "நான் ஏனடி பிள்ளை மற்றவையோட இதைப்பற்றி கதைக்கப் போறன். அந்த மனிதன் எனக்கு தம்பி மாதிரி. நான் உன்ர அப்பன் பண்டிதரிட்டை படித்தனான். சில்லறைப் புத்தி வராது எனக்கு." என்றார் மார்க்கண்டப்பு. "சரியனை. பகல் போக வேண்டாம். பின்னேரம் முதலாளியும் கிளாக்கரும் கடையால வந்து கோயிலுக்கும் போட்டு வந்த பிறகு நாங்கள் போய் ராணியம்மாவை பார்ப்போம்" என்றாள் நல்லம்மா.

மாலையானதும் வவுனியா நகர் வெறுச்சோடி விட்டது. படையினரின் வாகன ஓட்டம் அதிகரித்தது. தூரத்தில் செல்சத்தம் கேட்டபடி இருந்தது. நமசிவாயர் முதலாளியும் கிளாக்கர் கணேசுவும் கடையால் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் பண்டாரி குளச்சந்தியில் வரும்போது ஆகாயத்தில் பெரிய இரைச்சலுடன் இரண்டு கிபிர் விமானங்கள் அவர்களுடைய தலைக்கு

## யாழ்ப்பாண திண்ணை அரசியல் ஓர் அலசல்

மேலால் சென்றன. அப்போது "எத்தனை பேரை பலி எடுக்க யமன் போறானோ? தெரியாது." என்றார் நமசிவாயத்தார். "ஓம் ஐயா யமனுக்கு இருபத்தோராம் நூற்றாண்டில் எருமை வாகனம் எதற்கு? யம தூதர்களும் எதற்கு உந்த நாசகாரிகள் இருக்கேக்கை" என்றார் கிளாக்கர்.

வீடு வந்ததும் இருவரும் குளித்துவிட்டு அருகிலுள்ள கருப்பம் காட்டுப்பிள்ளையார் கோயிலுக்கு போய் கற்பூரம் கொழுத்தி, கும்பிட்டுவிட்டு வந்தார்கள். அவர்கள் வந்தால் வீட்டில் பக்திப் பாட்டு கேட்பது வழக்கம். அதை வைத்து முதலாளி வந்து விட்டார் என்பதை அயல்வீட்டிலுள்ள மார்க்கண்டு குடும்பத்தினர் அறிந்து கொள்வார்கள். "பிள்ளை! பாட்டு கேட்குது. முதலாளி வந்துவிட்டார் போல இருக்கு. வாவன் போவம்" என்றார் மார்க்கண்டப்பு. வீட்டைப்பூட்டிவிட்டு பழங்களையும் கொண்டு சென்றார்கள். இதே நேரம் நமசிவாயத்தார் வீட்டில் அவரும் அவருடைய மனைவியும் கிளாக்கரும் மகளும் மருமகனும் வறாந்தையில் இருந்து கதைத்துக் கொண்டிருந்தார்கள். வன்னிப் புதினங்கள் ஒரு பாரத கதை தானே.

"ராணி! நீங்கள் என்னிடம் சுகமாக வரவேணும் என்று சொல்லி பிள்ளை யாருக்கு அபிஷேகத்திற்கு நேர்த்திக்கடன் வைத்தனான். இன்று புதன், வரும் வெள்ளியன்று சதுர்த்தியும் வருகுது. மாலை ஐந்து மணிக்கு அபிஷேகம் நடக்கும். நீயும் ராசுவும் போங்கோ. அம்மா காசெல்லாம் கொண்டு வருவா. போய் வடிவாய் கும்பிடுங்கோ. நாங்கள் வர பிந்தும்." என்றார் நமசிவாயம். "அப்பா! இப்ப தேய்பிறை சதுர்த்தியல்லோ? முந்தி நாங்கள் வளர்பிறை சதுர்த்திதானே பெரிதாய் கொண்டாடுகிறது? இப்ப இதுவும் கொண்டாடப்படுகுதோ?" என்றாள். "எனக்குந்த விளக்கங்கள் தெரியாது. குருக்கள் இந்த சதுர்த்தியும் சங்கடம் தீர்க்கும் சதுர்த்தியென்று சொல்லி வீஷேசமாய் செய்கிறவர். அவ்வளவுதான். பிள்ளையாருக்னென்ன நல்லது கெட்டது? எல்லாம் எங்களுக்குத் தான்." என்றார் நமசிவாயம். "பாருங்கோ! சமயத்தில மனிதனால் ஆக்கப்பட்ட காரியங்கள் தான் கூட. கோயில்கள் இப்ப சட்டசபை மாதிரி சட்டதிட்டங்கள், மேற்பார்வை, கட்டணம், அறிவித்தல், பற்றுச்சீட்டு இருக்கிற கோயில்களுக்கு ஆக்கள் இல்லை, அதுக்குள்ள புதுக்கோயில்கள் வேற." என்றார் கிளாக்கர்

"சபையமைத்து சண்ட பிடிக்கச் சொன்னவரோ கடவுள்? கோயில்ல என்ன போட்டி? ஆதிக்கம்? பழைய முறையில நடப்பது தான் நல்லது. கோயில்கள் எங்கட கடையல் மாதிரி பற்றுச்சீட்டு கொடுக்கிற இடமாய் மாறிவிட்டது. இது தான் எல்லாப் பிரச்சனைக்கும் மூலகாரணம்." என்றார் நமசிவாயம். "மாமா! முந்தி பக்தனுக்கும் கடவுளுக்கும் இடையில் குரு மட்டும் இருந்தார். இப்போ கணக்குப்பிள்ளை, தலைவர், காரியதரிசி, பொருளாளர், நிர்வாகசபை உறுபிபினர் என ஒரு கூட்டமே இடையில் புகுந்து பக்தனை கோயில் வாசலுக்கு தள்ளிவிட்டது." என்றார் ராசு. 'ராணி! மார்க்கண்டனையும் மகளும் வருகின போல. கதிரை இரண்டு எடுத்துக்கொண்டு வா பிள்ளை." என்றார் நமசிவாயம். ராணி கதிரைகளை எடுத்துக் கொண்டு வரவும், மார்க்கண்டு குடும்பம் உள்ளே வரவும் சரியாக இருந்தது.

"வாருங்கோ! மார்க்கண்டனை இருங்கோ பிள்ளை, கையில என்ன?" என்றார் நமசிவாயம். "அது சும்மா" என்று கூறிக் கொண்டு ராணியிடம் அந்தப் பையைக் கொடுத்தாள் நல்லம்மா. "எப்படி தம்பி? எனக்கு உங்களைப் பார்க்க நாங்கள் கடலுக்கால் தப்பி வந்த ஞாபகம்தான வருகுது. காரை நகருக்கு ஆமி வர நாங்கள் கடலுக்கால அல்லோ உள்ளுக்க ஓடி வந்தனாங்கள். அதை நினைத்தால் இப்பவும் கூதல் ஓடும். காலில ஊரி குத்த குத்த நடைதான். இவள் வேற சின்னப்பிள்ளை, நாம் பட்ட பாடு எத்தனை பேர்! இருதய நோயால் இறந்தவர்கள். பிறகு நாங்கள் சங்கானைக்குப் போய் குடியேறினோம். அதற்குப் பிறகு சாவகச்சேரி போய் அதால கிளிநொச்சி போய் கிளிநொச்சியால வவுனியா வந்திருக்கிறோம். இந்தியாவிற்குப் போன என்ர தம்பி முருகேசு, மனைவி, பிள்ளைகள் மூன்று மொத்தமாய் ஐஞ்சுபேர் எங்கே என்று தெரியா. அநேகமாய் கடலுக்குள்ளதான் மூழ்கியிருக்க வேணும். இதுதான் எங்கட கதை". என்றார் மார்க்கண்டப்பு.

"தம்பி ராசு! இவர் நாத்தாண்டியாவில் பெரிய ஹாட்வெயா கடை முதலாளி. எண்பத்திமூன்று பிரச்சனையோட எல்லாத்தையும் வித்துப் போட்டார். இப்ப இவருக்கு வயசு எழுபத்தொன்பது. நல்ல மனிசன். அவரும் மகள் நல்லம்மாவும்தான் எங்களுக்கு ஆதாரம்" என்றார் நமசிவாயம். "எங்களுக்கும் இவைதான் பெரிய உதவி. பலாலிக்கும் காரை நகருக்கும் பொருத்தம் போல" என்றார் மார்க்கண்டப்பு. "மார்க்கண்டனை! இவர் எனது சகோதரியின் மகன் ராசு. அவருக்குத்தான் நான் மகளை செய்து வைத்தனான். தெல்லிப்பளை பாடசாலையில் நூலகராக இருந்தவர். பயிற்றப்பட்ட நூலகர். பலாலியிலிருந்து கோண்டாவிலுக்குப் போய் அங்கிருந்து முல்லைத்தீவிற்குப் போனவர்கள். அதோடு வேலையையும் விட்டு விட்டார். அதற்குப் பிறகும் நல்ல வசதியாய் இருந்தவர். இவர்களுக்கு மூன்று ஆண் பிள்ளைகளும் ஒரு பெண் பிள்ளையும். மூத்த பிள்ளைதான் கொழும்பில் சட்டத்தரணியாக இருக்கிறான். மகள் எக்கவுண்டனாக வேலை செய்கிறாள். கடைசி இரண்டு பொடியளும் விடுதலைப் போராட்டத்தில் இறந்து விட்டார்கள்" என்றார் நமசிவாயர்.

"ஆனால் தம்பி நமசிவாயம் நீர் மட்டும் பலாலியிலிருந்து அந்தக் காலத்திலேயே வவுனியாவுக்கு வந்து விட்டீர். பலாலிப் பிள்ளையாரிடமிருந்து கருப்பம்காட்டுப் பிள்ளையாரிட்டை ஏன்தான் இவர்களை இப்படி கஷ்டப்படுத்துதோ தெரியவில்லை" என்றார் மார்க்கண்டப்பு. "அதுதான் எங்களுக்கும் புரியவில்லை." என்றாள் ராணி. மார்க்கண்டருக்கு ராசுவின் கதையை அறிய வேண்டுமென்று மிகவும் ஆவல். எப்படித் தப்பினார்கள்? என்ன செய்தார்கள்? என்னதைக் கேட்க விரும்பினார். எனவே மெதுவாக "அது சரி" நீங்கள் எப்படி வந்து சேர்ந்தனீங்கள்? உங்களை மறிக்க கேல்லையோ?" என்று கேட்டார். "யமலோகத்திற்குப் போய் திரும்பி வந்த மாதிரித்தான் முல்லைத் தீவால் தப்பி வந்தவர்களுடைய கதையும் நரகத்தை விளிம்பில் நின்று பார்த்த அனுபவம்தான். இறுதியில் காப்பாற்ற வேண்டியவர்களே வதைத்த கதைதான். பாவங்கள் தப்பியொட்டி வந்தவர்களும் சுடச்சுட ஓடி வந்தவர்களே. அந்த அனுபவத்திற்கு உள்ளான மனிதன் சுட்டவர்களைப் பற்றி என்ன நினைத்திருப்பான்? சிலரைப் பொறுத்த வரையில் இலங்கையில் தமிழ்ப் பகுதிகளில் தொடர்ந்து பிரச்சனை இருப்பதையே விரும்புகிறார்கள். அவ்வாறு இல்லையெனில் அவர்களுடைய இருப்பு கேள்விக் குறியாகி விடும். சிலர் விடுவதெல்லாம் முதலைக் கண்ணீர்தான். ஆயிரம் நன்மை செய்தாலும் அவற்றைக் கெடுப்பதற்கு ஒரு தீமை போதும்" என்றான் ராசு. "மனிதனைப் புதைக்கின்ற பொழுது உடம்போடு அவன் செய்த நன்மைகள் புதைந்து விடும். சில தீமைகள் மட்டும் உலகத்தால் வழி வழியாக நினைக்கப் படும்." என்றார் நமசிவாயர்.

"நாங்கள் குடியிருப்பால் எழும்பியதும் மிகவும் கஷ்டப்பட்டோம். எமது குடும்பம் மாவீரர் குடும்பம். ஆனபடியினாலும் முக்கியமானவர்களைத் தெரியும் என்ற படியினாலும் செலுத்த வேண்டியவற்றை செலுத்தி சிலரின் உதவியுடன் வெள்ளைக் கொடியும் கொண்டு புறப்பட்டு வந்தோம். ஆமியின் கட்டுப்பாட்டை அடைந்ததும் அவர்கள் எங்களை சோதித்து படம் எடுத்த பின்பு ஓமந்தை முகாமிற்கு அனுப்பினர். அங்கு மூன்று நாள் தடுத்து வைத்து என்னையும் அவரையும் தனித் தனியாக விசாரித்தார்கள். இருவரும் ஒரே விதமாக உண்மையைக் கூறியதால் விடுதலை செய்தனர். பஸ்ஸில் ஏற்றி வவுனியாவிற்குக் கொண்டு வந்து விட்டார்கள்". என்றாள் ராணி. "முகாமில் ஒருவயது போன அம்மாவும் எங்களுடன் இருந்தவ. அவா ஒரு நாள் எங்களைக் கேட்டா "பாருங்கோ! போற போக்கைப் பார்த்தால் யுத்தம் விரைவில் முடியும் போல இருக்கு. அப்படியென்றால் வெளி நாட்டிலிருக்கின்ற அதுவும் அகதிப் பணம் பெற்றுக் கொண்டிருக்கிற எங்கட பிள்ளைகளை திருப்பி அனுப்பிப் போடுவாங்களோ?" என்று கவலைப்பட்டா. "இப்படியான ஆட்களும் இருக்கினை" என்றான் ராசு. "ஏன்? சிலர் காம்பில சிவில் உடுப்பில இருந்தவை, சில வேளைகளில் சொல்லுவினை "இவ்வளவு கஷ்டப்பட்டு ஆமி பிடிக்குது. அந்த இடமெல்லாம் இனி தமிழருக்கு இல்லை." என்று சொன்னார்கள். என்றாள் ராணி. "ஆருக்குத்தான் எது சொந்தம்? ஒருத்தற்றை சொத்தை இன்னொருத்தர் பறிப்பது மிகவும் கூடாத செயல். அந்தப் பாவமே அவர்களை அழிக்கும்.

இப்படி ஒரு கதை பைபிளில் இருக்கிறது. ஒரு மனிதரிடம் ஒரு கீரைத் தோட்டம் இருந்தது. அந்த நிலத்தின் மேல் ஆசை கொண்ட ஆட்சி அதிகாரம் உள்ள ஒருத்தரின் மனைவி தங்களுக்கு அதைத் தரும்படி கேட்டாள். அவன் அதற்கு மறுத்து விட்டான். எனவே, அவன் மீது அபாண்டமாக பழி சுமத்தி அவனைக் கொன்று அந்தச் சொத்தை பறித்து விட்டாள். சில காலம் செல்ல அவளை எதிரிகள் மாடியிலிருந்து தள்ளி வீழ்த்திக் கொன்றார்கள். அவளுடைய இரத்தத்தை நாய்கள் நக்கின. நிச்சயமாக காலம் பழி வாங்கும் 'அழ அழக் கொண்டது, அழ அழப் போகும்' என்பது தமிழ் மறையின் துணிவு." என்றார் நமசிவாயம். **"கடவுள் உலகத்தில பல காரியங்களைச் செய்துள்ளார். இஸ்ர வேலரை நாட்டை விட்டுத் துரத்தி, மீண்டும் நாட்டைக் கொடுத்தார். முசோலினி, ஹிட்லர், இடியமீன் ஆகியோருக்கும் சந்தர்ப்பம் கொடுத்தார். இறுதியில் ஹிட்லரை இருந்த சுவடே தெரியாமல் அழித்தார். முசோலினியை பாரியார் சகிதம் கம்பத்தில் தூங்க வைத்தார். இடியமீனை நாட்டை விட்டு ஓட விட்டார். கடாரத்தில் கொடி நாட்டிய தமிழர் இன்று இந்தியாவில் சாதாரணமாக வாழ்கிறார்கள். இந்திய ரூபா தாள்களில் தமிழுக்கு இடமே இல்லை. மூன்று தலைமுறைக்கு கெட்ட குடும்பமும் இல்லை. பெரிதாக வாழ்ந்த குடும்பமும் இல்லை என்பார்கள் பெரியோர்"** என்றான் ராசு.

"உயிரைக் கொல்பவனுக்கு நிலம் ஒரு பொருட்டோ? பஞ்ச தந்திரக் கதையில் அந்த மாடுகளை சிங்கங்கள் தந்திரமாகப் பிரித்து பின்பு கொன்று திண்ட கதை மாதிரித்தான் தமிழரின் கதையும் இலங்கையில் நடைபெறுகிறது. நாங்கள் பஞ்சபாண்டவர், கௌரவர் கதையை அறிவோம். இப்போ தமிழரின் காலம் வனவாசம். கடவுள் மெதுவாகத்தான் பதில் சொல்லுவார்" என்றார் மார்க்கண்டப்பு. "தற்போது சில விவேகமற்ற நடத்தைகளால் வெளி நாடுகள் எங்களுக்கு உதவி செய்யாமல் இருக்கலாம். நிலைமை ஒரே மாதிரியாக இருப்பதில்லை. போர்த்துக்கேயர் காலத்தில் இன்றைய இலங்கையை யாரும் கற்பனை பண்ணியிருப்பார்களா? வரலாறு திரும்பத் திரும்ப நடக்கும். ஆனால் இறைவன் படைப்பை யாராலும் அழிக்க முடியாது. அதற்கு நுளம்புகள் நல்ல உதாரணம். தெய்வீகத் தமிழையும் அதைத் தாய் மொழியாகக் கொண்ட இனத்தையும் இறைவன் அழியவா விடப் போகிறான்? திக்கற்ற தமிழ் மக்களுக்கு கடவுளே தஞ்சம். காலம் நிச்சயமாக பழி வாங்கும் என்பது கண்கூடு" என்றான் ராசு.

**அலசுபவர்....**

**பா.பாலச்சந்திர ஐயர்**

# கனவும் காசும் -01

பெரி.முத்துராமன்

இது ஒருதொடர் கட்டுரை ஆனால் அதேநேரத்தில் ஒன்றோடு ஒன்றுக்கு தொடர்பு இல்லாமலும் முழுமையானகட்டுரையாக இத் தொடரின் பகுதிகள் அமைந்திருக்கும்.

அன்றாடவாழ்வில் நம்மைப் பாதிக்கும் நிதிவிடயம் பற்றியகட்டுரைத் தொடர் இது. கனடாவில் கண்டகனவு நனவாக வழி கூறும் செய்திகள் அடங்கியதாக இத் தொடர் அமையும். பணம் மற்றும் நிதியம் சம்பந்தப்பட்டசெய்திகளின் ஆய்வும்,விளக்கமும்,அறிவுரைகளும் நிறைந்ததாக இருக்கும். உங்கள் கேள்விகளையும் நீங்கள் எழுதி அனுப்பி கேட்கலாம். பதில்கள் பலருக்கும் பயன்படும் வண்ணம் தரப்படும்.

ஸ்கோஷியாவங்கியின் ஆய்வு அறிக்கை ஒன்று வட்டிவீதங்கள் குறைந்தளவிலேயே 2014 வரை இருக்கும் என்று தெரிவிக்கின்றது. கனடியப் பொருளாதாரத்தின் வளர்ச்சி எதிர்பார்த்ததைவிடக் குறைவாகவே இருக்கும் என்று அந்த அறிக்கை தெரிவிக்கின்றது.

ஆனால் பாங்க் ஆப் கனடாவின் கவர்னர் மார்க் கார்னியோலண்டன் பிபிசிக்குஅளித்தபேட்டியில் சமீபத்தில் வட்டிவீதங்கள் உயர்வதற்கானசாத்தியக் கூறுகள் உள்ளதாகத் தெரிவித்துள்ளார்.

என்றாலும் உயரும் என்றுநான் நம்பவில்லைஅமெரிக்கபொருளாதாரம் இன்னும் இயல்புநிலைக்குத்திரும்பவில்லை. கனடிய வேலையில்லா தோரின் சமீபத்திய புள்ளிவிபரங்கள் கவலைதருவதாகஉள்ளது. கனடிய வீட்டுச் சந்தையோ குளிர்ச்சி அடையத் துவங்கிவிட்ட பிறகு எங்கிருந்துவட்டிவீதத்தைக் கூட்டமுடியும்? நடைமுறைச் சாத்தியம் இல்லைஎன்றுதான் தோன்றுகின்றது.

டொரோண்டோமாநகரில் றியல் எஸ்டேட் போர்டுகளின் மூலம் யூலை 2012ல் விற்க்கப்பட்டவீடுகள் 7570. சென்றஆண்டில் யூலையில் விற்க்கப் பட்டவீடுகளோ 7683 ஆக இந்தவருடம் விற்பனையானவீடுகளின் அளவு சென்ற ஆண்டைவிட 1.5 சதவீதம் குறைவு.

டொரோண்டோ ரியல்எஸ்டேட் போர்ட், புதியவீட்டுக் கடன் விதிமுறை களையும், டொரோண்டோ மாநகரின் நிலவரியையும் முக்கியகாரணங்களாக இந்தசரிவுக்கு கூறுகின்றது.

சந்தையில் விற்பனைக்கு வரும் வீடுகளின் எண்ணிக்கை, வாங்கநினைப் போருக்கு தேவையானதை விட அதிகமாகவே உள்ளது. இந்த நிலை வீட்டை வாங்க நினைப்பவர்களுக்குச் சாதக மான நிலை. இந்தநிலை தொடரலாம் என்றேதோன்றுகின்றது. பெரிய வீழ்ச்சிஎன்றுஒன்று இல்லா விட்டாலும் வீட்டுவிற்பனையில் பொதுவில் மந்தநிலையும் மெதுவான சரிவும் சிலகாலத்துள் தென்படலாம் என்றேதோன்றுகின்றது.

ரியல்எஸ்டேட் போர்ட்டுகள் மூலம் புதிதாக விற்பனைக்கு வந்த வீடுகளின் எண்ணிக்கையை பார்ப்போம்.

| | விற்பனைக்கு | |
|---|---|---|
| | யூலை 2012 | யூலை 2011 |
| **(416)எண்ணுடன் ஆரம்பிக்கும் டொரோண்டோ நகரப் பகுதிகள்** | 5537 | 5040 |
| **905எண்ணுடன் ஆரம்பிக்கும்டொரோண் டோவைச் சுற்றியுள்ளநகரப் பகுதிகள்** | 8351 | 7367 |
| **மொத்தம்** | 13888 | 12407 |

| | விற்றது | |
|---|---|---|
| | யூலை 2012 | யூலை 2011 |
| **விற்பனைக்கு வந்த வீடுகளில் உண்மையில் விற்கப்பட்ட வீடுகள்** | 7570 | 7683 |

அதேசமயத்தில் சில ஏரியாக்களில் வீட்டு விலை தொடர்ந்து ஏறிக் கொண்டுதான் இருக்கின்றது. சொந்த உபயோகத்திற்கு வீடு வாங்குபவர்கள் விலை விழுமா, ஏறுமா என்று பார்க்கத் தேவையில்லை. 2008ல் சற்றேவிலை சரிந்துமீண்டும் உயரத்துவங்கியது பலருக்கும் மறந்திருக்காது. ஆனால் லாபம் சம்பாதிக்கும் நோக்கில் வீட்டையோ, இடத்தை யோவாங்க நினைப்பவர்கள் தான் கூடுதல் கவனத்துடன் செயல்படவேண்டும். உங்கள் சூழ்நிலைக்கு ஏற்ற ஆலோச னைகளை இக் கட்டுரை ஆசிரியரிடம் இலவசமாகப் பெறலாம்.

நான் மேலே கூறியவை நிதர்சன உண்மைஎன்பதை இந்தப் புள்ளி விபரங்களைப் பார்த்தால் நன்குவிளங்கும். முன்னர் குறிப்பிட்டதைப் போல வீட்டு விலைகளில் பெரியவிலைச் சரிவுகள் நிகழாது என்றுதான் ரியல் லீ பேஜ் நிறுவனத்தின் சமீபத்தியஅறிக்கையும் கூறுகின்றது. கடந்த சில வருடங்களாக விலைஏற்றம் நினைத்துப் பார்க்க முடியாத அளவிற்கு ஏறிக் கொண்டிருந்தது. வீட்டுச் சந்தை சூடாகத் தான் இருந்தது. சம்பளங்களில் பெரியஏற்றம் இல்லை. சம்பளங்களில் பெரியஏற்றம் இல்லாத அளவில் தொடர்ந்துவிலைஏற்றம் என்பது செயற்கையான ஒன்று இயற்கையாக நிகழமுடியாது. நிகழ்ந்தால் நிலைநிற்க முடியாது. அதற்காக கனடிய வீட்டுச் சந்தை நம்பிக்கை குறைந்துவிட்டதா? அப்படி ஒன்றும் தெரியவில்லை.

தங்கத்தைஎடுத்துக் கொள்ளுங்கள். விலைகள் சிலவருடங்களாகபெரிதாகஒன்றும் ஏறவில்லை. ஒருகுறிப்பிட்ட எல்லைக் குள்ளேயே இருந்துவருகின்றது. சிலபேர் விலை இறக்கத்திற்கானஅறிகுறிகள் தெரிவதாகவும் கூறுகின்றனர்.

ஆண்டுகள் ஒன்றிரண்டுஎன்றால் நிலைமை எப்படி இருக்கும் என்றுஆருடம் கூறுவது கடினம். ஐந்திலிருந்து ஏழு ஆண்டுகள் வரைசேமிப்புதனை விட்டுவைக்கத் தயார் என்றால் தங்கமோ, வீடோ எதில் முதலீடு செய்தாலும் லாபம் தரத்தான் வேண்டும்.

இந்த அவசர உலகத்தில் பொறுமை காக்க எத்தனை பேர் தயார்? சூதாட்டத்தில் இறங்கினால் வெற்றியை விடதோல்விக்கே வாய்ப்புக்கள் அதிகம். உங்கள் முதலீடு களை சூதாட்டமாகக் கருதாதீர்கள்.

கடந்த பத்தாண்டுகளில் வீடுகளை வாங்கி விற்றுபணம் பார்த்தவர்கள் நம்மில் பலர் உள்ளனர். ஆனால் எதுவுமேதொடரும் என்று எதிர்பார்க்கக் கூடாது. மாறதஉலகில் மாறாது இருப்பது மாற்றம் ஒன்று. மாற்றம் நிகழ்ந்தால், நினைப்பதற்குமாறாககாரியங்கள் நடந்தால், நிலைமைகளை சமாளிக்க முடியுமா? சிந்தியுங்கள்! செயல்படுங்கள்!

இக் கட்டுரை ஆசிரியரிடம் இலவச ஆலோசனைப் பெற தொலைபேசி எண்
**416 473 61**

# முன்னாள் அதிபர் பொ. கனகசபாபதியின் இரு நூல்களின் வெளியீட்டு விழா

குமுளன்

மிகப் பிரமாண்டமானதொரு நூல் வெளியீட்டுவிழாவாக கடந்த சனிக்கிழமை மாலை 5.45க்கு ஆரம்பமான நிகழ்வு 9.30வரைக்கும் இடம்பெற்றது முன்னைநாள் சோமஸ்கந்த மற்றும் மகாஜனக்கல்லூரி அதிபர் பொ.கனகசபாபதி அவர்களுடைய நூல்வெளியீடு. பத்திரிகையாளர்கள் குருசேவ், திலீப்குமார், பரமேஸ்வரன் ஆகியோரோடு மாநகர சபை உறுப்பினர் திரு. லோகன் கணபதியும் முன்னைநாள் எதிர்க்கட்சித்தலைவர் அமர்தலிங்கத்தின் துணைவியார் மங்கயற்கரசி அமிர்தலிங்கம் அம்மையாரும் மங்கலவிளக்கேற்றிவைக்க செல்வி இலட்சியா மணிவண்ணன் நீராரும் என்னும் தமிழ் நாட்டுத் தமிழ் வாழ்த்தை இசைத்தார் தொடர்ந்து கனடிய தேசீய கீதத்தை செல்வி நளாயினி பாலராஜனும் இசைத்தபின்னர் ஆரம்பமானது நூல் வெளியீட்டு விழா. நிகழ்வினை திரு. கதிர் துரைசிங்கம் அவர்கள் நெறிப்படுத்தினார். முதலாவது அமர்விற்கு பிரபல நாடகரான தாசீயசின் சகோதரதான அருட்தந்தை பேர்னாட் அவர்கள் தலைமை தாங்கினார். முதலாவது அமர்வில் "எம்மை வாழ்வைத்தவர்கள்" என்னும் நூல் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. தலைமையுரையில் அதிபர்களைப் பற்றி இப்பெரியார் எழுதியிருப்பது மிகப்பொருத்தமானதும் மிகக்கவனமாகக் கையாள்பபட்பட்ட அருமையானதொரு நூல் எனவும் எடுத்துரைத்தார். இந்த நூலுக்கான அறிமுக உரையினை நிகழ்த்தினார் ரொறன்ரோ பல்கலைக்கழக பேராசிரியர் செல்வா கனகநாயகம் அவர்கள். மிக உயர்ந்த மனிதர்கள் கல்வி தந்தவர்கள். எமது தமிழ்சமூகத்திற்கு கல்வியறிவூட்டியவர்களின் மகத்தான பணிகளைப் பதிந்து வைத்துள்ள இந்த நூலின் அதிபர் பொ.கனகசபாபதி ஒரு சிறந்த கல்விமான். அவர் இந்த நூலை மிகக் கவனமாக மிக ஒழுங்காகப் பதித்துள்ளமை அவரின் திறமையின் வெளிப்பாடு. இந்த நூலில் தரப்பட்டுள்ள அதிபர்கள் உண்மையிலேயே பெரும் பணியாற்றினார்கள். அவர்களைப் பற்றிப் பதிவான நூல் மிகவும் பயனுள்ள ஒரு நூல் எனக்குறிப்பிட்டார்.

ரொறன்ரோ பல்கலைக்கழக விரிவுரையாளர் அருட்தந்தை ஜோசெப் சந்திரகாந்தன் அவர்கள் நூலை ஆய்வுசெய்தார். ஆய்வுரையில் அதிபர் பொ. கனகசபாபதி அவர்கள் எம்மத்தியிலே வாழ்ந்துவரும் மாபெரும் அறிஞர். அவர் அதிபர்களைப் பற்றி எழுதவதற்கு மிகப் பொருத்தமானவர். யாழ்ப்பாணத்துச் சமூகம் கல்வியில் முன்னேறியதற்கு உழைத்தவர்கள் அந்தக் காலந்தொட்டு பணியாற்றிய அதிபர்கள், ஆசிரியர்கள். ஆசிரியர் பணி என்பது மிகவும் மகத்தானது. அந்தச் சேவையால் நாம் தலைநிமிர்ந்து நிற்பதற்குக் காரணமானவர்கள் அதிபர்களும் ஆசிரியர்களும். யாழ்ப்பாணத்துச் சமூகம் சிறந்த கல்வியியலாளர்களைப் பெற்றுக்கொள்ளுவதற்குக் காரணமானவர்களை ஒழுங்கு முறைப்படுத்தி மிக சிறந்த உரைநடையில் எழுதித்தருவதற்கு அதிபர் பொ.கனகசபாபதியைத் தவிர வேறுயாருமாக இருக்கமுடியாது. அத்துணை சிறப்பும் இயல்பும் கொண்ட ஒரு திறமைமிக்கவர் அவர். ஆவர் செய்துள்ள இந்தப் பணி காலத்தின் தேவைமட்டுமல்ல காலத்தால் நிலைத்து நிற்கக்கூடிய ஒரு ஆவணமாகவும் அமைந்துள்ளது என்பதனையும் எடுத்துரைத்தார்.

அதனைத் தொடர்ந்து இரண்டாவது அமர்வுக்கு தலைமைதாங்கினார் திரு. மணிவேலுப்பிள்ளை அவரகள். இரண்டாவது அமர்வில் "மரம் மாந்தர் மிருகம்" என்னும் நூல் வெளியீடு செய்யப்பட்டது. தலைமையுரையில் இந்த நூல் ஒரு சிறுகதை நூலா அல்லது கட்டுரை நூலா என்பதுபற்றிய ஒரு சர்ச்சையை எழுப்பி உரையாற்றினார் மணிவேலுப்பிள்ளை. அணிந்துரையில் இதனை ஒரு கட்டுரை நூல் ஆனால் வாசிக்கும்போது கதைவாசிப்பதுபோன்ற சுவாரஸ்யமாக உள்ளது என முனைவர் பால.சிவகடாட்சம் அவர்கள் குறிப்பிட்டுள்ளமையையும் "இச்சிறுகதைத் தொகுப்பில் ஒட்டுமொத்தமாக 25 கதைகள் இடம்பெறுகின்றன" என கலாநிதி செ.சிவயோகநாதன் அவர்கள் குறிப்பிட்டுள்மையையும் எடுத்துக்கூறி பல எழுத்தாளர்கள் கட்டுரைகளைக் கதைகள் போல இலக்கிய நயத்துடன் எழுதியமையை எடுத்துக்காட்டி அவ்விதமே அதிபரின் நூலும் உள்ளது என்றுரைத்ததோடு இது கதையா கட்டுரையா என்பதனை ஆராய திருமதி விமலா பாலசுந்தரமும் மருத்துவக் கலாநிதி லம்போதரனும் உள்ளார்கள். அவர்கள் இதனைப் பற்றிக்கூறுவார்கள் அத்தோடு அதிபர் தனது ஏற்புரையில் தெளிவாக எடுத்துரைப்பார் என்றார். அதிபர் தனது பிள்ளைகளுக்க மணிவண்ணன், மணிமாறன், மணிவிழி, மணிமொழி எனப் பெயர்வைத்ததாலோ என்னவோ மணி வேலுப்பிள்ளையையும் இங்கு இணைத்துள்ளார். நானும் அவர்களில் ஒருவனாகச் சேர்த்துள்ளமைக்கு நன்றி தெரிவிக்கின்றேன் என்றும் உரைத்தார்.

யாழ்பல்கலைக்கழக முன்னைநாள் நூலகரான திருமதி, விமலா பாலசுந்தரம் அவர்கள் அறிமுக உரையாற்றினார். அவர் ஒவ்வொரு இயலிலும் வரும் அம்சங்களைக் குறிப்பிட்டதோட மரம், மாந்தர், மிருகம் என ம. மா, மி என ஒழுங்குமறையில் தந்துள்ளார் எனவுரைத்ததோடு அவர் குறிப்பிட்ட மரங்கள் அவரின் எழுத்தின் தொடக்க உரையாகக் கொள்ளப்பட்டுள்ளது எனவும் குறிப்பிட்டதோடு தமிழைச் சிறார்களுக்குச் சொல்லித்தந்து இப்படியான அரியநூல்களை வாசிக்கவழிசெய்ய வேண்டும் எனவும் சபையோரை வேண்டிக்கெண்டார். தெடர்ந்து உரையாற்றிய மருத்துவக் கலாநிதி இலம்போதரன் அவர்கள் நூலுக்கு ஆய்வுரை செய்யும்போது ஒரு நூலில் காணப்படும் குற்றங்களை தொல்காப்பியர் நன்னூலார் பத்தாகத் தொகுத்துத் தந்துள்ளனர். அவற்றை அடிப்படையாக வைத்து நோக்கும்போது இந்தப் புத்தகத்தினை மதிப்பீடு செய்யமுடியும் என்றுரைத்த அவர் தலைவர் மணிவேலுப்பிள்ளை அவர்கள் இந்து கதையா, கட்டுரையா, அல்லது கதைக்கட்டுரையா, கட்டுரைக்கதையா எனப் பல்வேறு உதாரணங்களைத் தந்தார் நான் அறியாத பலருடைய பெயர்களையும் குறிப்பிட்டார். இந்த வாதப்பிரதவாதங்களை ஒருபுறத்தில் இருத்திவிட்டு நாம் நூலைப்பார்க்கும்போது மரம், மாந்தர், மிருகம் என்று தலைப்புக்கொடுத்துள்ளார். ஆனால் புல்லாய்ப் புழவாய்ப் வல்லசுரராகி மனிதராய் என்ற அடிப்படையில் பார்க்கும்போது அவர் மனிதருக்கு மேன்மையைக் கொடுத்திருக்கவேண்டும் ஆனால் எம்மில் பலர் மிருகங்களாகவே இருக்கின்றார்கள் என்பதனை அவர் அறிந்துள்ளார் போலும் என நகைச்சுவையோடு தொடர்ந்த அவர் இந்த நூலில் அங்கத உணர்வினை விதந்து குறிப்பிட்டுள்ளமை அவரது சுவையை எடுத்துக்காட்டுகின்றது. அவரைப் பற்றிய உள்மன வெளிப்பாட்டை காட்டும் அங்கதச் சுவையை எடுத்துக்கூறி அவரைப்பற்றி நாம் அறிந்துகொள்ள முடிவதோடு அவரைப்பற்றி இதுவரை எண்ணியதை மாற்றவேண்டும் போல உள்ளது என சபையோரின் சிரிப்பொலியின் மத்தியில் மிகச் சிறந்ததொரு உரையையாற்றினார்.

பாராளுமன்ற உறுப்பினர் செல்வி ராதிகா சிற்சபையீசன் அவர்கள் அதிபரைப்பற்றி சிற்றுரை நிகழ்த்தி அதிபருடைய பண்பினைப் போற்றிப் புகழ்ந்ததோடு தன்னை ஒரு மகளாகவே கருதும் அவருடைய உயர்ந்த தன்மையை மதித்துப் பாராட்டி உரையாற்றிச் சிறப்புப்பிரதிகளை வெளிநாடுகளில் இருந்து வந்த திருமதி. சோமகாந்தன் மற்றும் அமெரிக்காவில் இருந்துவந்த தனது பழைய மாணவர்களுக்கும் அதிபர் பட்டியலின் இடம்பெற்ற அதிபர்கள் பணியாற்றிய பாடசாலை பழைய மாணவர்களுக்கும் வழங்கிக் கௌரவித்ததைத் தொடர்ந்து அதிபரின் ஏற்புரை இடம்பெற்றது. ஏற்புரையில் தனது நூலுக்கு ஆய்வுரை, வெளியீட்டுரை, அறிமுகவுரை நிகழ்த்தியவர்களைப் பாராட்டி நன்றி தெரிவித்து உரையாற்றியதோடு தலைமைதாங்கிய அருட்தந்தை பேர்னாட் மற்றும் மணிவேலுப்பிள்ளை அவரக்ளின் உரைபற்றியம் எடுத்துரைத்ததோடு மணிவேலுப்பிள்ளை அவர்கள் தன்னிடம் இது கதையா, கட்டுரையா என்ற வினாவிற்கு விடையளிக்கவேண்டும் என்று குறிப்பிட்டு தர்மசங்கடத்துள் ஆழ்த்திவிட்டார். ஏதோ எனக்குத் தெரிந்ததை எழுதினேன். நான் தமிழ் பண்டிதருமல்ல தமிழ் கற்றவனும் அல்ல எனக்குத் தெரிந்து மொழியில் எழுதினேன் என்றார்.

செல்விகள் இலட்சியா மணிவண்ணன், சாஹித்தியா சுகுமார் அவர்களின் தமிழ்த்தாய் வாழ்த்தோடு நூல்கள் பார்வையாளர்களுக்கு வழங்கப்பட்டது.

(படங்களை பக்கம் 40 இல் பார்க்கலாம்.)

# CASSA NITE 2012 Council of Agencies Serving South Asians

புதுவை இராமன்

இக்கனேடிய மண்ணில் அனைத்து நாடுகளையும் சேர்ந்த பல்லின மக்களின் வாழ்க்கை முறைகளும், அவர்களின் கலை இலக்கிய பண்பாட்டு நாகரீக மரபுகளும் தான் இந்நாட்டு அரசின் தாரக மந்திரமாக அமைந்த Unity in Diversity என்பதை முதன்மைப்படுத்தி பல்கலாச்சார ஒற்றுமையுணர்விற்கு சான்றாகத் திகழும் வண்ணம் பல்வேறு விதங்களின் தங்களை உயர்த்திக்கொள்வதோடு, இந்நாட்டின் பொருளதார முன்னேற்றத்திற்கும் உறுதுணையாய் இருந்து பிறந்த மண்ணிற்கும், புகுந்த மண்ணிற்கும் பெருமை சேர்த்து வருகிறார்கள். அதற்கேற்றபடி தங்கள் தங்கள் நாடு, இனம், மொழி மற்றும் கலாச்சாரப் பின்னணியுடன் தங்களை அடையாளப்படுத்தும் விதத்தில் பல்வேறு சமூக அமைப்புக்களை ஏற்படுத்தி, வருடந்தோறும் பலவித சமூக நிகழ்வுகள், பண்டிகைகள் மற்றும் சேவைகள் என எண்ணற்ற நிகழ்ச்சிகளை நடத்தி அனைவரையும் மகிழ்வித்து வருகின்றனர். அவ்வாறான சமூக சேவை அமைப்பில் ஒன்றாக மிகவும் சிறப்பாக செயல்பட்டு வரும் Council of Agencies Serving South Asians என்ற அமைப்பு ஆற்றி வரும் சேவைகளும், மேற்கொண்டு வரும் பல முன்னேற்றப் பணிகளும், குறிப்பாக தெற்காசிய சமூகத்தினர் அனைவரும் பயன்பெறும் வகையில் ஏற்படுத்தப்பட்ட எந்தவித லாபநோக்கமோ அல்லது அரசியல் சார்பற்ற ஒரு தர்ம ஸ்தாபனமாகும். கடந்த நான்கு வருடங்களாக தெற்காசிய சமூகம் மேம்பாடு அடையும் விதத்தில், குறிப்பாக பொருளாதாரம், சமூக முன்னேற்றம், அரசியல், கலாச்சார பண்பாடுகளுக்கு தேவையான வசதிகளையும் வாய்ப்புக்களையும் ஏற்படுத்தி தரும் வகையில் பல்வேறு திட்டங்களை மேற்கொண்டும், அதற்கான பயிற்சிகளையும் அளித்து வருகிறது. இதன் முக்கிய அமசங்களாக Social Justice, Anti-racism, Responsiveness, Diversity, Acountablity ஆகியவற்றுடன், 2011-2014 வரையிலான Stratagic Directions – Immigration and smart settlement, Poverty reduction, Health Equity, Youth Engagement and Leadership, Anti Racism, Gender Equity and Seniors Income Security and well Being போன்ற புதிய திட்டங்களையும் செயல்படுத்த இருக்கிறது என்பதை, கடந்த 12ம் திகதி மிகவும் கோலாகலமாய் Scarborough. 3330.Pharmalcy Avenue, Princess Banquet Hall ல் நடைபெற்ற "Our Stories, Our Histories' An exhibition and Gala Dinner to celebrate South Asian Heritage Month CASSA NITE 2012 – வைபவத்தின் போது அனைவருக்கும் அளிக்கப்பட்ட தகவல் குறிப்பில் குறிப்பிட்டுள்ளது. ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம் என இசையும், நடனமும், இனிய இரவு விருந்தும், கூடுதல் பெருமையளிக்கும் விதத்தில் மேற்கூறிய எட்டு தகமைகளில் சாதனை புரிந்த தெற்காசிய கனேடிய பிரபலங்களைப் பாராட்டி, நினைவுக்கேடயம் வழங்கி கௌரவித்த அத்தனையுமே அந்த மாதிரி!

அன்றைய விழாவிற்கான அனைத்து ஏற்பாடுகளையும் இவ்வமைப்பின் நிறைவேற்று இயக்குனரும் ஒன்றாரியோ மாகாண என்.டி.பி கட்சியின் தலைவருமான நம் அனைவருக்கும் நன்கு அறியப்பட்ட தாயகத் தமிழருமாகிய திரு. நீதன்ஷான் அவர்களும், அவருடன் இணைந்து செயல்பட்ட இவ்வமைப்பின் நிர்வாக சபை உறுப்பினர்கள் மற்றும் தன்னார்வலர்களின் பங்களிப்பும், உபசரிப்பும் அனைவரையும் மன நிறைவு பெறச் செய்ததோடு பெரும் பாராட்டுதல்களையும் பெற வைத்தது.

இந்நிகழ்ச்சிக்கு இங்குள்ள பல்வேறு முக்கிய அரசியல் பிரமுகர்கள், குறிப்பாக பாராளுமன்ற உறுப்பினர் ராதிகா சிற்சபயீசன், மார்க்கம் மாநகர சபை உறுப்பினர்கள், திரு. லோகன் கணபதி மற்றும் இங்குள்ள வர்த்தக வியாபார பிரபலங்கள், ஊடகவியலாளர்கள் என மண்டபம் நிறைந்த விதத்தில் பார்வையாளர்கள் பங்குகொண்டுச் சிறப்பித்தனர்.

அன்றைய நிகழ்வின் சிறப்பே ஆடல் பாடல்களோடு, இனிய விருந்தும், CASSA'S Excellence in Equity Awards எனும் விருது வழங்கும் இரவாக அமைந்த ஒரு வித்தியாசமான ஒன்றுகூடல் என்றுதான் கூறும்படி அமைந்திருந்தது. அனைத்து நிகழ்வுகளையும் புன்னகை தவழ தனது ஆங்கில சொல்லாற்றலால் Steven D'Souza of CBC தொகுத்து வழங்கியது அனைவரையும் கவர்ந்தது என்றால் வியப்பில்லை.

அனைவரையும் வரவேற்றுச் சிறப்பித்த இவ்வமைப்பின் தலைவர் Maya Bhullar தங்களது அமைப்பினைப் பற்றிய முன்னுரை வழங்கி, இதுவரை மேற்கொண்ட பணிகள், சாதனைகள் பற்றிய விபரங்களைக் கூறி, தெற்காசிய சமூகம் பயன் பெறும் விதத்தில் ஆக்கபூர்வமான புதிய திட்டங்களை மேற்கொள்ள இருப்பதையும் தனது வரவேற்புரையில் ஏடுத்துரைத்து அனைவருக்கும் நன்றி பாராட்டிச் சிறப்பித்தார். அடுத்து கண்களுக்கு விருந்தாக இசையுடன் கூடிய பரதநாட்டிய நிகழ்ச்சியை முன்னணி இளம் நடனக் கலைஞரான நிவேதா ராமலிங்கம் அவர்கள் அற்புதமாக தனது நடனக்கலைத் திறனுடன் அனைவரையும் கண்டுகளிக்கச்செய்தார்.

இவ்வமைப்பின் நிறைவேற்று இயக்குனர் திரு. நீதன்ஷான் அவர்கள் தனது சிறப்புரையில், தெற்காசிய சமூகம் எதிர்கொண்டிருந்த பல்வேறு சமூகப் பிரச்சினைகளுக்கு எவ்வாறு இவ்வமைப்பு தீர்வுகாண வைத்து நிறைவடையச் செய்ததைப் பற்றி விவரித்தார். மேலும் இன்றைய இளைஞர்களின் மத்தியில் நிலவும் பல்வேறு பிரச்சினைகள், குறிப்பாக கல்வி, வேலை வாய்ப்பு மற்றும் சுற்றுப்புற சுகாதார தேவைகள், முதியோர் மற்றும் மகளிருக்கான உடல் நல சேவைகள் பற்றியும், எதிர்காலத்தில் ஆண்,பெண், முதியோர் மற்றும் குழந்தைகளுக்கான பல்வேறு நலத்திட்டங்களை செயல்படுத்தி முன்னேற்றம் காண இருப்பதையும் தனது உரையில் குறிப்பிட்டதோடு, தங்கள் முயற்சிகள் அனைத்தும் திருவனையாக்கிட அனைவரின் நல் ஆதரவு தொடர்ந்து நீடிக்க வேண்டியதின் அவசியத்தையும் கூறி தனது உரையை நிறைவு செய்தார். அன்றைய நிகழ்ச்சியின் பிரதான அம்சமாகிய கீழ்கண்ட சாதனையாளர்கள் முறையே அறிமுகப்படுத்தப்பட்டு இவ்வமைப்பின் நிர்வாக சபை உறுப்பினர்களால் விருதுகள் வழங்கி கௌரவிக்கப்பட்டார்கள்.

1) Economic Justice for Organized Labour – **Pramila Aggarwal**
2) Economic Justice – **Nadira Gopalani**
3) Gender Equity – **Kripa Sekhar**
4) Youth Engagement – **Shahina Sayani**
5) Seniors wellbeing – **Parvathy Kandasamy**
6) Migrant Justice – **Chris Ramsaroop**
7) Health Equity – **Wahida Valiante**
8) Access and Equity – **Ceta Ramkhalawansingh**

பிரதம விருந்தனராக கலந்துகொண்ட Executive Director of NY Taxi Workers Alliance Mr Bhairavi Desai அவர்கள் தெற்காசிய சமூகத்தின் முக்கியத்துவத்தையும், அவர்களின் ஒன்றுபட்ட முற்போக்கு பணிகளையும், அவர்களது கலாச்சார ஒற்றுமையுணர்வையும் பெரிதும் பாராட்டியதோடு, அவர்களின் தேவைகளை பூர்த்தி செய்யும் உயர்ந்த மனிதநேய நோக்கத்தோடு செயல்படும் காசா அமைப்பையும் பாராட்டி, அன்றைய விழா சிறக்க முன்னின்று ஒத்துழைத்த அனைவருக்கும் நன்றி பாராட்டி உரையாற்றினார்.

இரவு விருந்துடன் அனைவரும் கலந்து உறவாடி மகிழ்ந்தது மட்டுமின்றி Floor Dance என இந்தியாவின் மிகவும் புகழ் பெற்ற பஞ்சாப் மாநிலத்தின் பாரம்பரிய நடனமான பங்ரா நடனம், இந்தித் திரைப் படப்பாடல்களுக்கான நடனம், வயிலினிசை போன்ற கலை நிகழ்ச்சிகள் அனைவரையும் பங்குகொண்டு நடனமாட வைத்ததோடு, இமைக்கும் செவிக்கும் விருந்தாக இந்த ஆண்டு ஒன்றுகூடல் விருந்து உபசாரம் இனிதே நிறைவுற்றது.

# “கலையருவிநுண்கலைப் பயிலகம்” அளித்தநடனவிருந்து



**ம**றைந்த மகாத்மா மாமேதை அருட்திரு MSGR. S.M. ஜோர்ஜ் அடிகளாரின் எண்ணக்கருவில் உருவாகி இன்று ஆல விருட்சமாகத் திகழும் கலைகளின் மகுடமான திருச்சி கலைக்காவேரி நுண்கலைப் பயிலகத்தின் முதல் முத்தான ஸ்ரீமதி ரேணுகாதேவிவிக்னேஸ்வரனின் கலையருவிநுண்கலைப் பயிலகம் அழகுறஅளித்த இரண்டாவதுநாட்டியஅரங்கேற்றம், புரட்டாதித்திங்கள் முதல்நாள் மாலைப்பொழுதில் சீனகலாச்சாரமையத்தில்,அரங்கம் நிறைந்த பார்வையாளர்கள் முன்னிலையில் அரங்கேறியது. செல்விநிஷாந்தி விக்னேஸ்வரன், செல்வி கௌசிகாவரதராஜா இருவரும் கலையருவியின் மாணவியர்,தங்கள் திறமைகளை அரங்கம் முன்னிலையில் பறைசாற்றினர். சலங்கைப் பூசையை ஸ்ரீ மீனாட்சியம்மன் ஆலய ரங்கநாதக்குருக்கள் முன்னெடுத்துஆசீர் அளித்தார். மாணவிநிஷாந்தியின் தாயாரும்,குருவுமானரேணுகாதேவியும் மாணவிகௌசிகாவின் தாயார் திருமதிவரதராஜாவும் குத்துவிளக்கேற்றினர். கனேடிய,தமிழ்த்தாய் வாழ்த்தின் பின் எமக்காய் மறைந்த எம்மாவீரர்கட்கும்,அப்பாவித் தமிழர்க்கும் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டு, தந்தையர் இருவராலும் வரவேற்புரை வழங்கப்பட்டு நிகழ்வுகள் தொடங்கப்பட்டது. பக்கவாத்தியம் இன்றிகலை நிகழ்ச்சிக்கு களைஏது? கலைஞர்கள் அறிமுகம் அழகுற ஆரம்பமாகியது.

**நட்டுவாங்கம்:- ஸ்ரீமதிரேணுகாதேவி**, கலையருவி நுண்கலைப் பயிலகத்தின் அதிபர்,சர்வதேச நடனக்கலைஞர்- பலமாபெரும் தலைவர்கள் முன்னிலையில் தனதுநடனக்கலையைசெவ்வனேவெளிப்படுத்திப் பாராட்டுக்களைக் குவித்தவர். மறைந்தபாப்பரசர் 23ம் அருளப்பசின்னப்பர், மறைந்தஅருட்சகோதரி அன்னைதெரேசா ஆகியோர் முன்னிலையில் ஆடி அவர்கள் திருக் கரங்களால் ஆசிபெற்றவர். மேடைநிகழ்வுகள் பலவற்றைத் திறம்படச் செய்து,கனடாவின் சிறந்தChoreographer எனப் பெயர் பெற்றவர்.100 க்கும் மேற்பட்டமாணவியரைத் தயார் படுத்துகிறார். மனஅழகும் உடல் அழகும் கொண்டசிறந்ததிறமைசாலி.



**வாய்ப்பாட்டு:- திரு. வர்ணராமேஸ்வரன்** சங்கீதமிருதங்ககலாவித்தகர் இசைக் கலைமாமணிதமிழ் ஈழத்தின் சிறுவிளானைப் பிறப்பிடமாகக் கொண்டவர்,தந்தையார் கலாபூசணம் சங்கீதரத்தினம் அவர்களைமுதல் குருவாகக் கொண்டு, மாமேதைகளான மகாராஜபுரம் சந்தானம்,மிருதங்கவித்வான் திரு. வரதராஜ சர்மா,வித்வான் திருவாரூர் பக்தவத்சலம் திரு. தியாகராஜன், கல்கத்தா கிருஷ்ணமூர்த்தி, T.V.கோபாலகிருஷ்ணன் ஆகியோரிடம் வீணை,வாய்ப்பாட்டும் கற்று, திருமதி மேரிநாயகியிடம் பியானோ இசையும் முறைப்படிபயின்று, கலைக்காகவே வாழ்ந்துவருபவர். வடஈழம் சங்கீத சபை,ராமநாதன் இசைக்கல்லூரி, சென்னைப் பல்கலைக் கழகங்களிலும் பட்டங்கள் பலபெற்றவர். இவரதுவர்ணம் இசைக்கல்லூரி,Virtual Academy online ஆகியவை கனேடியமண்ணில் புகழ் பெற்றவை.

**மிருதங்கம்**

**மிருதங்க ஞானவருதி ஸ்ரீ வாசுதேவன் ராஜலிங்கம்**- சங்கீதபூசணம் T. ராஜலிங்கம் அவர்களின் மகனும் இசைப்பரம்பரையில் வந்த இவர் 24 வருடங்களாக கனடாவில் மிருதங்கம் பயிற்றுவித்து 62 மாணவர்க்குஅரங்கேற்றம் செய்வித்துள்ளார். மிருதங்க சேஷாத்திரம் எனும் பயிலகத்தையும் நிறுவியுள்ளார். குருகுலம் எனும் கோடைகாலபயிற்சியைஉருவமைத்து,மாணவர்க்குகலைகளுடன் தன்னம்பிக்கை, நல்லொழுக்கம் ஆகியவற்றையும் பயிற்றுவிக்கும் திறன் கொண்டவர். மேலும் இவருடன் இவரதுமகன் ரிஷி வாசுதேவன் மிருதங்கம் வாசித்து பார்வையாளர்களைக் கொள்ளைகொண்டார். இவர் அமெரிக்காவில் மருத்துவ மாணவராகவும், இவ்விளம் வயதிலேயேசிறந்தமிருதங்கக் கலைஞராகத் திகழ்கிறார்.



**வயலின்**

**ஸ்ரீமதிவிஜயலட்சுமிசீனிவாசகம்**- சிறந்தபாடகியும் வயலின் கலைஞருமான இவர்பாரம்பரிய இசைக்குடும்பத்தில் பிறந்து,TMT. கல்யாணராமன்,TN.சேஷ கோபாலன் ஆகியோரிடம் முறைப்படி கலைகளைக் கற்று,நாதாலயாஎனும் சாஸ்திரிய இசைக்கல்லூரியை நிறுவி,வயலின் வாய்ப்பாட்டுக்கு இரண்டு இசைத் தொகுப்புக்களை வெளியிட்டுள்ளார். தெய்வீகக் கானங்கள், மிலேனியகானங்கள்- இவ்விரண்டும் இவரின் கலை அர்ப்பணிப்பை வெளிக்கொணர்கிறது. மேலும் 1992ல் ஒன்ராறியோஅரசின் DE DICATED SERVICE FOR CLASSICAL MUSIC விருதும், உலகத் தமிழ்ப் பெண்கள் சங்கம் வழங்கியROLE MODEL FOR TAMIL WOMEN விருதும் பெற்றுள்ளார். மேலும் இசைக்குயில், இசைஅரசி, இசைசுடரொளி ஆகியபட்டங்களும் கிடைக்கப் பெற்றவர். மிகவும் பண்பான ஆசிரியை. பண்பட்டகலைஞர்கள் அறிமுகத்துடன் ஆரம்பமானது இன்றையநிகழ்வு.மேடையில் தோன்றியநடனமணிகள் இருவரது முக உடை அலங்காரம் மிகமிகப் பிரமாதமாகத் தோன்றியது. நாட்டை இராகம் ஆதிதாளத்துடன் தொடங்கிய புஸ்பாஞ்சலி எடுத்த எடுப்பிலேயே பலத்தகரகோஷத்தைக் கொடுத்தது. தொடர்ந்து அலாரிப்பு, ஜதிஸ்வரம் அபிரிதமாகஆடினர் இருவரும். பிரமாதமானசுத்தமானநட்டுவாங்கம் சபையோரைப் பிரமிக்கவைத்தது. எதைப் போற்றுவதுஎனத் தடுமாறவைத்துவிட்டனர். ஆசிரியைரேணுகாதேவியும் மாணவிகளும், மிஸ்ராப்புதாளத்துடன், ராகமாலி காராகத்துடன் கிருஷ்ண சப்தம். மாணவிநிஷாந்தியின் முகபாவங்கள் மிகமிகநன்றாக இருந்தது. சிந்துபைரவி ராகத்துடன் ஆதிதாளத்தில் மாணவிகௌசிகாவின் பதம் சபையோரை மிகமிகக் கவர்ந்தது. நவரசபாவங்களை இருவரும் மாறிமாறிமேடையில் தோன்றிஆடினர். நடனஅமைப்பும் பிரமாதம் என்றுசொல்லத் தோன்றியது. மேலும் அம்மாகீர்த்தனை உறவுகளிலே மேன்மையானது தாயின் பந்தம், அழகியநடனம், மாணவியர் இருவரது முகபாவங்கள் பலேசொல்லத் தோன்றியது. பண்பட்ட ஆசிரியையின் நேர்த்திமாணவர்கள் இருவரிடமும் மிளிர்ந்தது. மயில் நடனம் மிகமிகஅழகுறஅமைக்கப்பட்டிருந்தது. பின்பு தில்லானாமங்களம் இரண்டும் மிகமனதைக் கொள்ளைகொண்டது.

**பிரதமஅதிதிபொன் கனகசபாபதிஅவர்கள் தமிழர்கள் அனைவரும் கலைகளையும், கலாச்சாரத்தையும் மக்கள் மிகவும் மதிக்கப் பழகவேண்டும், ஏதோஅழைத்தார்கள் வந்தோம் தலையைக் காட்டிவிட்டுப் போனோம் என்றில்லாமல் கடைசிவரை நிகழ்வுகளை கவனித்து விருந்தோம்பு பவர்களை மதித்து ஆடியபிள்ளைகளை ஆசீர்வதிக்கப் பழகவேண்டும் என்றார்.** இவரைப்பற்றிக் கூறுவதானால் வாழ்நாள் முழுவதும் தமிழுக்காகவும் வாழ்பவர். இதுவரை ஆறு நூல்கள் வெளியிட்டுள்ளார். திறமையானசர்வதேசப் புகழ் பெற்ற எழுத்தாளர்.

**சிறப்பு அதிதியாக திரு.நல்லரத்தினம் மாசிலாமணி அவர்கள் The PASSION for an Art என்பதை இரு சிறுகதைகள் மூலம் தமிழிலும் ஆங்கிலத்திலும் விரிவாகஎடுத்துரைத்தார்.** இவர் பல்கலைவித்தகர். சட்டம்,மருந்தியல்,ஆங்கிலம் கற்பித்தல், தோட்டவைத்தியம், சமூகசேவையாளர் இப்படியானபலமுகங்களில் பரிமளிப்பவர். கனடாசுவாமிவிபுலாநந்தர்

(39ம் பக்கம் பார்க்க.....)

கலைமன்றத்தின் உறுப்பினராகவும், பின்பு தலைவராகவும் இருந்து மன்றத்தை சிறந்த முறையில் வழிநடாத்தியவர்.
மேலும் சிறப்பு விருந்தினர் திருமதிதேவகிகுலத்துங்கபாரதி, நாட்டிய கலைமாமணி, பண்பட்ட சிறந்தநாட்டியமணி, பரதநாட்டியபேராசிரியர் எனப் பெயரெடுத்தவர் பூர்வீகத்துப் புண்ணியம் செய்தவர்கள்தான் இப்பிறவியில் கலைகளை நேசிக்கும் ஆத்மாக்கள் என்றார்.
திருமதிரேணுகாதேவியின் ஆணித்தரமான நட்டுவாங்கம், அதனை யொட்டி செல்வி நிஷாந்தி, செல்வி கௌசிகா ஆகியோரின் தாளம் தப்பாமல் ஆடியநடனமும் மிகமிக நேர்த்தி யானது என ரொம்பவும் பாராட்டிப் பேசினார். பக்கவாத்தியக்காரர் ஒவ்வொருவரையும்,அவரவர் திறமைகளைவர்ணித்தும் பேசினார். நம் நாடு இப்படியாக கலைகளில் சிறந்து விளங்குவதைப் பார்த்துசந்தோஷப்பட்டார். கலைகளைப் பயில மூன்றுவிஷயம் தேவைமுதலில் ஆத்மார்தமானஆசிரியர் ஒருவரும், ஊக்கமளிக்கப் பெற்றோரும் மூன்றாவதாககற்பிக்கப்படும் கலையைஉள்ளத்தில் நிறுத்திஆசிரியர் பெருமைப்படும் வரைதிருப்பிக் கொடுத்தல் இது மூன்றையும் இம்மேடையில் கண்டதாகக் கூறினார். தனது முப்பதாண்டுக்கால கலைச்சேவையில் இந்த நடன அரங்கேற்றம் மிகமுக்கிய இடத்தைப் பிடித்தது எனவும் ரொம்பவும் பாராட்டிப் பேசினார். கடைசியில் கலைஞர்க்கு கௌரவம் அளித்தல், நன்றியுரைகளுடன் நடனமணிகள் இருவரையும் அன்புடன் ஆசீ அளித்து மனமகிழ்வுடன் பிரிந்தனர் சபையோர்.

**பிரான்சிஸ் மகள்**



















கடந்த 8ஆம் திகதி மார்க்கம் சிவிக் மையத்தில் அதிபர் திரு.கணகசபாபதி அவர்களின் இரு நூல்களின் வெளியீட்டு விழா நிகழ்வின் போது எடுக்கப்பட்ட படங்கள் படங்கள் : ஆரூரன்